உ

சிவமயம்.

# மருதவனபுராணம்.

(முதற்பாகம்)

தஞ்சை அரண்மனை

ஸ்ரீசரபோஜிமகாராஜா உத்தரவின்படி

சிவக்கொழுந்து தேசிகர் அவர்கள்

இயற்றியது

---

ஷை அரண்மனை சிவாஜீ மஹாராஜா குமாரர்

**ஸ்ரீ. சரபோஜிமஹாராஜா**

உத்தரவின்படிக்கும்

திருப்பணிப்பேட்டை கோவிந்தசாமிப்பிள்ளை,

அம்மாபேட்டை கந்தசாமிச்செட்டியார்,

திருமாந்துறை சபாபதிப்பிள்ளை,

இவர்கள் கேட்டுக்கொண்டபடிக்கும்

திருவிடைமருதூர்

**குமாரபூசை மகோற்சவம்**

நடத்திவருகிற

ஸ்ரீ கிருஷ்ணசாமிகாடேராவ்சாகேப்

குமாரராகிய

சாமிராவ்காடே அவர்களால்

கும்பகோணம்

"லார்ட்ரிப்பன் அச்சுயந்திரசாலையிற்"

பதிப்பிக்கப்பட்டது.

1893.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மருதவனப்புராணம்.

## பாயிரம்.

## கடவுள் வாழ்த்து

### ஆண்டவிநாயகர்.

உலகமுணர்ந் திடுகருணை யுருநெடுமொஞ் சகமதினி டிவணை யெய்தி
யலகில்புக ழுறுகவிகை நிழலதின்மெய் யன்பர்குல மதனைக் காக்கக்
குலவுமுப நிடதவரி யணைமீது பரசெழிற்செங் கோல்கைக் கொண்டாங்
கிலகுமிடை மருதாண்ட விநாயகனை யெப்பொழுது மிறைஞ்சி வாழ்வா
[ம். (௧)

### வாழ்த்து.

வேறு.

பூவுல கிதனு ளோங்கும் புகழுறு சுருதி வேள்வி
மேவுமா கமநன் னூல்கள் விளங்குக வளங்க ளீடு
பாவுக மதிக்கோர் மூன்று பயின்மழை பொழிக நாளுங்
காவிரி வருக வாரி காவலன் செங்கோல் வாழ்க. (௨)

### நூற்பயன்.

வேறு.

போற்றலுறு மருதவனப் புராணமென்னப்
புகலிதனைப் படிப்பவர்கள் கேட்போரியாரு
மாற்றரிய வினையினொடு பகையைவென்று
மன்னுநெடுஞ் செல்வமொடு மகவுமெய்தித்
தேற்றலுறு புவியினிடை நீடுவாழ்ந்து
திகழுறுவிண் ணுலகில்வள ரின்பந்துய்த்துச்
சாற்றரிய பரஞான மருவியீசன்
சரணபங் கயநிழல்வீற் றிருப்பர்மன்றே. (௩)

### மகாலிங்கேசர்.

வேறு.

பூமேவு திசைமுகன்மா லெனுமவரும் போற்றரிதாய்ப் பொருவி லாதாய்
நாமேவு செழுமறையி னுட்பொருளா யகண்டிதமாய் நளின மென்னு
மாமேவு மலர்வாவிக் கயல்தாவிக் கனியுதிர்க்கும் வளத்தினீடு [வாம்.
தேமேவு பொழில்புடைசூ ழிடைமருதின் வளரொளியைச் சிந்தைசெய்



### ஏகநாயகர்.

தேறுபுக ழிடைமருதி லுறையேக நாயகன்றன் செய்ய தாளு
மூறுமது மலர்க்கூந்தற் பசியமயி லுறையிடமு மோங்கு கங்கை
யாறிலகு சடைமுடியு மைமுகமு நாற்றோளு மணிமுக் கண்ணுங்
கூறுதிற லிருமானு மொருமழுவு மனவரதங் குறித்து வாழ்வாம் (ரு)

### மருதவாணர்.

ஒருதவள மால்விடைமேற் புகலவுறு மொருசிருட்டி யுதயந்தன்னிற் [யக்
பொருதனிவான் சிலைநுதல்வேற் றடங்கணுமை யணங்கினொடு புவனமுய்
கருதிமையோர் கணம்புடைசூழ் கயிலையினின் றணைந்தனையகயிலையென்னு
மருதநிழ லிடத்துறையு மருதவா ணக்கடவுண் மலர்த்தாள் போற்றி. (சு)

### [illegible]நலமாமுலையம்மை.

[illegible] கண் முளைத்தருள்வண டளிர்குழைத்துப்
[illegible]கிப், பண்[illegible] மதிச்சடிலப் பவளமலை யிடத்தினிதுபடர்
ந்[illegible]மை, [illegible] முகிழ்ந்துவகை பூத்துமணந் திடைமருதி
[illegible]யோர் [illegible]ற, [illegible]கழ்ப் பெருநலமா முலையெனச்சொல் பசுங்
[illegible]டியை [illegible]ங்குவா[illegible]. (எ)

### வயிரவர்.

வேறு.

[illegible]லையோர் [illegible]கத் திறுதியிற் கதிர்கண் மேவுடுக் கணங்கள்கீ ழுறத்தீம்
[illegible]லையொத் திடுசங் கீன்றமுத் தினங்கள் பரந்திடப் புவியிடத் தெழுந்த
வேலையின் மிதந்த புகலியந்தோணி விளங்கிடு வடுகனுங் கடவுள்
காலமென் போதை யுச்சியிறகொள்வாங் கடுந்துயர் மாலதீர்ந் திடவே.

### படித்துறை விநாயகர்.

வேறு.

வடித்துறைவே லனகருங்கட்பாவையர்க ளொமேருதம்வயங்குவான்வீற்
பிடித்துறைநன் களிக்குமுகி லுலவுமலர்ப் பொழிலினிடைப் பெருகு செ

ந்தேன், குடித்துறைவண் டினங்களுமோ திடைமருதின் மருதீசர் கோ
யின்மேவு, படித்துறைக்குஞ் சரத்தின்மலர்ப் பதத்துணையை மனத்துணை
யாப் பதித்து வாழ்வாம். (௯)

### குமாரக்கடவுள்.

சத்திதனை யணைவள்ளி காந்தனைக்கந் தனையசுரர் தம்மை வென்ற
சத்திதனை யுறுமலர்க்கைத் தலத்தனையன் போர்கடமி தயமாம் பங்க[னே
சத்திதனை யிடைமருதூர்க் குமரனைநெஞ் சேபணியென் றன்பான்மன்
சத்திதனை யவனுகந்தின் னருளெனக்குத் தருமஃதுன் சகாயமாமால். (௰)

### திருநந்திதேவர்.

முழுதுலகு நிறைபிரமம் பரமனே யெனமறைகண் மொழியுந் தன்மை
வழுதியின்பான்முதுகிலடி படுபொழுதிற்கண்டிருந்து மயங்குவோர்க்குக்
குழுவுறுமால்விரிஞ்சன்முதல்வானவர்மேற் கைப்பிரம்பு கொண்டுதாக்கிச்
செழுமணித் தண்கயிலையின்பாற் றெளிவிக்கு மவன்மலர்த்தாள் சிரத்திற்
கொள்வாம். (௰௧)

### நாமகள்.

[ண்டு
எழுத்தசைசொற் பொருளுதவு மணிகளிரு வகைபெறுபா வினங்கள் கொ
மழுத்தடக்கைக் கடவுளிடை மருதவன வடசொலுறு மான்மி யத்தை
வழுத்திடத்தென் றமிழதனு மினிதுபுரிந் திடுகவென மகிழ்ந்து வண்டின்
குழுத்த மைப்போற் றிடுதவள பங்கயத்தி னுறைந்திடுபூங் கோதைதானே.

### தமிழாசிரியர்.

புவியினகத் திருளொதுக்கி வானெய்தி யறியவுறு பொருள்கள் காட்டிச்
சவிமருவிப் பொலிபரிதித் தமிழினிது தோன்றுகுண சயிலந் தன்னைக்
குவிதிரைத்தண் பெருங்கடலை நெடுங்கிரியை யடக்குசிறு குடங்கையானை
நவியமெடுத் திடுபானுக் குரியவனைப் பணிகுவதே நமக்கு வேலை. (௰௩)

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

சிவஞானக் கடலருந்திக் கருமைகொடு திசைகளெங்குந் தெரிய மின்னித்
தவரினஞ்சூழ்ந் திடவுலக முணரவிடித் தமண்கோடை தணப்ப வோங்கு
புவனமதிற் சைவநெடும் பயிர்தழைப்பப் பரங்கருணைப் பொருப்பின்மீது
கவிமழைகள் சொரிபுறவக் கவுணியக்கொண் டலைநாளுங் கருத்துள் வை
ப்பாம். (௰௪)

### திருநாவுக்கரசு நாயனார்.

வடமருவு தென்னிழலிற் கருணைவடி வாய்விளங்கு வரதன் போல [டு
விடமமிர்த மெனப்பருகிச் சூலந்தோண் மிசையேற்று விடைமேற்கொண்

தடமருவு தரணியிடைத் திகழ்ந்திவொ சேர்பத சரோ ருகத்தைத்
திடமுறுமன் பொடுதினமுஞ் சிந்திப்போர் துயர்களெல்லாஞ் சிந்திப்போ
[மால். (௰௫)

### சுந்தரமூர்த்தி நாயனர்.

முதலைவள ராரூறு தந்திடவை யாறெய்தி முடிவில் லாத [ண்
முதலைநெடுந் தமிழொடுசெந் தமிழ்க்கவிதை யாற்றுதித்து மொழியாவிக்க
முதலையொரு மகவுதரச் செய்துகந்த முன்னேனை முகிழ்மென் கொங்கை
முதலையிதழ்ப் பரவைமணு ளனைவணங்க நமதெண்ண முற்றுந் தானே. ()

### மாணிக்கவாசகசுவாமிகள்.

வந்திதனிச் சிவலோகம் பெறவுழுதி பவநீங்க மனத்தி னீடார்
வந்திதனிக் கொம்மைமுலை யுமையவள்பால் வைத்தபரன் மகிழ்விறைடல்
வந்திதம்பெற் றிடப்பல்லோர் வைகையின்பாற்கண்டிடச்செய் மறையோ
வந்திதக வுறமனமே நந்தமைமெய் யன்பரிடைவைக்கு மன்றே. [ன்றனை

### சண்டேசநாயனர்.

நேசமுறு தாதைபுரி தவறுமவன் றுணைப்பதமு நீக்கி நீடு
பாசமகற் றிடுபரம பதத்தினெடு சண்டேச பதமும் பெற்றேன்
வாசமலர்ப் பதந்தனையாம் வணங்கிடுது மனையதனி வணக்கமாகும்
பேசரிய பேரின்ப மருவுதற்கோர் பதமென்னப் பெரிதுமன்றே. (௰௭)

### பட்டினத்துப்பிள்ளையார்.

விளம்புகாரொனுமிடற்று மருதிறைவன் றிருவருளின் மெய்ம்மைநோக்கிக்
களம்புகார் வின்மதன்றன் படைமகளிர் புவியாசை கருதுங்காத
துளம்புகா ராகிவெறுத் தணைந்தொருமும் மணிக்கோவை யுகந்து நல்கும்
வளம்புகார்ப் பட்டினத்துப் பிள்ளையெனும் பெரியவர்தாண் மனத்துள்
[வைப்பாம். (௰௮)

கடவுள் வாழ்த்து.

முற்றிற்று.

---



## அவையடக்கம்

சொன்ன மேருமுன் சிறியகற் குன்றமுந் துலங்கு
மன்னு மான்மதக் களிற்றின்முன் முயல்களும் வயங்கும்
பன்னு தண்கதிர்க் கடவுண்முன் னுடுக்களும் பயிலு
மென்னின் மேதையர் கவிதைமுன் னிலங்கு மென் கவியும். (உ0)

பகரு நாமொழின் மலரொடு பயில்கட வுளர்தஞ்
சிகர முற்றிடு திறமெனச் சிறியனேன் பனுவன்
மகர வண்குழைப் பிறைச்சடை மருதநா யகன்றன்
புகழு டன்கலந் தறிஞர்தஞ் செவிக்களம் புகுமால். (உக)

விமல ஞாயிறு சிறியனேன் விளம்பிய கவிதை
கமல நாண்முகை யறிந்தநீ டருளினோர் கருத்து
நிமிர்தன் மேவழுக் காற்றினோர் நெஞ்சக மலர்ந்த
குமுத மூடர்த முறுமனங் குறித்திடு கருங்கல். (உஉ)

நற்ற வத்தினோர் தொழுமிடை மருதிறை நாம
முற்ற விக்கதை யானெடுத் துரைத்திடு கின்றேன்
முற்று சீருறு தென்றமி ழிலக்கண முழுதுங்
கற்று ளார்தமைப் புவினோர் புகழ்ந்திடக் கருதி. (உங)

அவையடக்கம் முற்றிற்று.



ஆக திருவிருத்தம் உங.







சிவமயம்

# திருநாட்டுச்சிறப்பு.

விருத்தம்.

பொன்னி லத்துறை சுரர்களும் விருப்புறும் பொலிவுந்
துன்னி யீசர்வாழ் பதிகளுந் துதைந்திசை தரணி
தன்னி லோங்குநா டெவற்றிற்குந் தலைமைய தாகிச்
சென்னி நாடெனத் திகழுறு நாட்டணி தெரிப்பாம். (க)

திங்க ளொண்சுதைக் கதிரின துருவெனச் சென்று
மங்கு லின்வழித் தண்கடற் றெண்டிரை வாரி
பங்க மின்றுயர் பரிமுகத் தெரியினிற் பருகிப்
பொங்கு கள்ளிருள் வடிவுபெற் றெழுந்தன புயல்கள். (உ)

எழுந்த தண்புய லிடைமரு திறையவ னிபத்தின்
முழங்கி யாங்கத னுடையின் மின்னியோர் மூன்று
செழுங்க ணுனுட னுமைதிகழ் சிறப்பின்விற் கோட்டிப்
பொழிந்த சையமேற் சுரரமு துகுத்தன போல. (ஙு)

மாலெனப் புகல் பெயருறு மாயனு முகிலும்
வேலை வாய்க்கடைந் தெடுத்தமு துதவினும் விளங்கு
மேலை வானவர் தமக்கரி யுதவினன் விசும்பு
ஞால மீதுறு சராசர வுயிர்க்கெலா நல்கும். (ச)

ஓங்கி டும்பல சிகரங்கொள் சிலம்பின்மே லுதகந்
தாங்கு தண்புயல் சொரிதர விராவணன் றன்மேற்
றேங்கொள் பூந்தொடைத் தசரதப் பெயரினோன் சிறுவன்
வாங்கு விற்கொடு சொரிந்திடு சரங்களை மானும். (ரு)

துங்க வெற்பினிற் கருமுகில் சிலையொடுந் துன்னிப்
பொங்கு தீம்புனல் சொரிதரல் புனையுநீ டெழிலா
ரோங்கள் காளத்தி யிடத்திலோ ரன்பன்வா யிடுநீர்
சங்க ரன்றிரு முடிமிசை யுமிழ்ந்திடுந் தன்மை. (சு)

கூறு வானிடை மிடைதரு பயோதரங் குளிர்பூ
நாறு வெற்பினின் சுனைசொரி நறும்புனற் றுறை

தேறு வான்றனி மகவன்னை யன்னதன் செவ்வா
யூறு கொங்கையிற் பீர்விடுத் தூட்டுவ தொக்கும். (எ)

கருவ ளாச்சிக ரத்தினின் றிடையிடை கதிர்வெள்
ளருவி யின்கண மார்ப்பரித் திழிகுவ தாங்காங்
கிருளும் வெண்ணில வுங்கறுத் தணிவகுத் திலங்கப்
பொருது வெல்வதற் கெதிரெதிர் நிற்பது பொருவும். (அ)

வெற்பி டத்துறு தாளங்க ளுடன்றிரை வேலை
யிற்பி றங்குநித் திலங்களு மிடையிடை யிசைத்துப்
பொற்பு விண்ணெனும் வணிகனோர் நோக்குதல் புரையும்
விற்பரப்பு நித்தி லங்களோ டாலிகண் மிடைதல். (கூ)

வேறு.

அலைகொடு திரிவான் சிறி யம்புக டிரக்கின் மாவுங்
கொலைபுரி யிபமுந் தேருங் குலமணி வில்லு மம்பு
மலையெனும் பெயருங் கொண்டு வளர்சைய வேந்து வாளா
குலவுற நின்றி டுங்கொல் கோபமேற் கொண்ட தம்மா. (ய)

வேறு.

குரவ னேதவத் தொருவனை வலுவினிற் கொண்டு
விரவு பாசநீத் தரனிடை விடுத்திடு திறத்தி
னுரவு தண்கடற் புனன்முகந் துவர்கெடுத் துலகம்
பரவ நீள்புயல் விடுத்தது பொன்னியின் பாங்கர். (யக)

வேறு.

வாகுறு தரள மூரற் கயமுலை வண்கைக் காந்தள்
மேகமென் கூந்தற சைய வெற்பனங் ககத்தி யன்றன்
மாகமண் டலமென் றேதும் வயிற்றினின் றுதித்த கன்னி
யாகிய பொன்னி நீத்த மருவியைத் தழீஇய தன்றே. (யஉ)

வேறு.

அருவி பொற்கதிர்ப் போரிழுத் தாங்கிழி
யருவி வச்சிர மீனென வார்த்தெழுங்
குருவி யின்கணங் கூட்டற மந்திகள்
குருவி யன்மணி கொண்டெறிந் தோட்டுமால். (யங)

சிந்து வாரஞ் செறிவெதிர் நித்திலஞ்
சிந்து வாரத் தசோகஞ் சிதைத்துநி
வந்து வாரத் திறைஞ்சிட மண்ணுளோர்
வந்து வாரங் கடந்தது வாரியே. (யச)





சிவமயம்

# திருநாட்டுச்சிறப்பு.

விருத்தம்.

பொன்னி லத்துறை சுரர்களும் விருப்புறும் பொலிவுந்
துன்னி யீசர்வாழ் பதிகளுந் துதைந்திசை தரணி
தன்னி லோங்குநா டெவற்றிற்குந் தலைமைய தாகிச்
சென்னி நாடெனத் திகழுறு நாட்டணி தெரிப்பாம். (க)

திங்க ளொண்சுதைக் கதிரின துருவெனச் சென்று
மங்கு லின்வழித் தண்கடற் றெண்டிரை வாரி
பங்க மின்றுயர் பரிமுகத் தெரியினிற் பருகிப்
பொங்கு கள்ளிருள் வடிவுபெற் றெழுந்தன புயல்கள். (உ)

எழுந்த தண்புய லிடைமரு திறையவ னிபத்தின்
முழங்கி யாங்கத னுடையின் மின்னியோர் மூன்று
செழுங்க ணுடை னுமைதிகழ் சிறப்பின்விற் கோட்டிப்
பொழிந்த சையமேற் சுரரமு துகுத்தன போல. (ங)

மாலெனப் புகல் பெயருறு மாயனு முகிலும்
வேலை வாய்க்கடைந் தெடுத்தமு துதவினும் விளங்கு
மேலை வானவர் தமக்கரி யுதவினன் விசும்பு
ஞால மீதுறு சராசர வுயிர்க்கெலா நல்கும். (ச)

ஓங்கி டும்பல சிகரங்கொள் சிலம்பின்மே லுதகந்
தாங்கு தண்புயல் சொரிதர விராவணன் றன்மேற்
றேங்கொள் பூந்தொடைத் தசரதப் பெயரினோன் சிறுவன்
வாங்கு விற்கொடு சொரிந்திடு சரங்களை மானும். (டு)

துங்க வெற்பினிற் கருமுகில் சிலையொடுந் துன்னிப்
பொங்கு தீம்புனல் சொரிதரல் புரையுநீ டெழிலா
'ரெங்கள் காளத்தி யிடத்திலோ ரன்பன்வா யிடுநீர்
சங்க ரன்றிரு முடிமிசை யுமிழ்ந்திடுந் தன்மை. (சு)

கூறு வானிடை மிடைதரு பயோதரங் குளிர்பூ
நாறு வெற்பினின் சுனைசொரி நறும்புனற் றுறை

தேறு வான்றனி மகவன்னை யன்னதன் செவ்வா
யூறு கொங்கையிற் பீர்விடுத் தூட்டுவ தொக்கும். (எ)

கருவ ளைச்சிக ரத்தினின் றிடையிடை கதிர்வெள்
ளருவி யின்கண மார்ப்பரித் திழிகுவ தாங்காங்
கிருளும் வெண்ணில வுங்கறுத் தணிவகுத் திலங்கப்
பொருது வெல்வதற் கெதிரெதிர் நிற்பது பொருவும். (அ)

வெற்பி டத்துறு தாளங்க ளுடன்றிரை வேலை
யிற்பி றங்குநித் திலங்களு மிடையிடை யிசைத்துப்
பொற்பு விண்ணெனும் வணிகனோர் நோக்குதல் புரையும்
விற்பரப்பு நித்தி லங்களோ டாலிகண் மிடைதல். (கூ)

வேறு.

அலைகொடு திரிவான் சிறி யம்புக டிரக்கின் மாவுங்
கொலைபுரி யிபமுந் தேருங் குலமணி வில்லு மம்பு
மலையெனும் பெயருங் கொண்டு வளர்சைய வேந்து வாளா
குலவுற நின்றி டுங்கொல் கோபமேற் கொண்ட தம்மா. (ய)

வேறு.

குரவ னேதவத் தொருவனை வலுவினிற் கொண்டு
விரவு பாசநீத் தரனிடை விடுத்திடு திறத்தி
னுரவு தண்கடற் புனன்முகந் தவர்கெடுத் துலகம்
பரவ நீள்புயல் விடுத்தது பொன்னியின் பாங்கர். (யக)

வேறு.

வாகுறு தரள மூரற் கயமுலை வண்மைக் காந்தள்
மேகமென் கூந்தற சைய வெற்பணங் ககத்தி யன்றன்
மாகமண் டலமென் றேதும் வயிற்றினின் றுதித்த கன்னி
யாகிய பொன்னி நீத்த மருவியைத் தழீஇய தன்றே. (யஉ)

வேறு.

அருவி பொற்கதிர்ப் போரிழுத் தாங்கிழி
யருவி வச்சிர மீனென வார்த்தெழுங்
குருவி யின்கணங் கூட்டற மந்திகள்
குருவி யன்மணி கொண்டெறிந் தோட்டுமால். (யங)

சிந்து வாரஞ் செறிவெதிர் நித்திலஞ்
சிந்து வாரத் தசோகஞ் சிதைத்துநீ
வந்து வாரத் திறைஞ்சிட மண்ணுளோர்
வந்து வாரங் கடந்தது வாரியே. (யச)

மற்க டத்தடங் கோடு மருவுமா
மற்க டத்தடங் கோடு மருவொடு
சொற்க டத்தலர் துன்னிடு தண்புனல்
சொற்க டற்செல வென்னத் துலங்குமால். (௰௫)

மாத னந்தன் வயினுற வாய்ந்துதண்
போத னந்தன் மிசைக்கொடு போதலிற்
போத னந்தம் புரைதரு மென்பராற்
போத னந்தம் வளைபயில் பொன்னியே. (௰௬)

காம ருர்திண் கரைபொரு காவிரி
காம ருமலர் கன்னல் பரித்தலின்
மாம ருக மலைவன மேவியே
மாம ருக மருளனு மேய்க்குமால். (௰௭)

வேறு.

புன்ரு கம்மறு கம்பு பொருந்தலை
மன்ரு வுமிழும் மதிசூ டிறையைப்
புன்ரு கம்மறு கம்பு பொருந்தலை
மன்ரு தரவோ டேகிடு மாநீர். (௰அ)

வேறு.

செல்புனல் குறிஞ்சி யிற்கொள் செறிகதிர் நேமி வாளி
வில்லுட னணைந்து முல்லை விளங்கிடங் கெவையுங் கொண்டு
மெல்லிடை மகளி ராய ரிரங்கநோய் விளைத்திட் டோடி
மல்லலம் புவனத் தோர்க்கு மறவர்பாற் பயிற்சி காட்டும். (௰௯)

குலவுறு புறவினின்று கொடியிடை நுடங்க வங்க
ணிலகுவெண் டயிர்பால் வெண்ணெ யினிதுறு தாழி பற்றி
வலுவொடு தலைமேற் கொண்டு வனமுலை குலுங்கச் சென்ற
தலகில்சீர் மருத நோக்கி யாயர்த மடந்தை யென்ன. (உ௰)

இன்னலம் படரும் பொன்னி யிலங்கிடு பொழிற்பூங் கோதைக்
கன்னலென் னெழிற்றேட் பைம்பூ கதமிடற் றரம்பை யென்னு
மன்னுமென் கவான்வண் டேமாந் தளிரியன் மருதப் பாவை
தன்னெழிற் றேழி யாகத் தழீஇவிளை யாடி நின்று. (உக)

தடமுறு மருதங் கொண்ட தமனக முதல சூடித்
திடமுறு வனச மென்னுந் திருமுக மலர்வுற் றன்ன
மடநடை கொடுசென் றங்கே தகைமண மருவ லுற்ற
கடலிறை யவன்முன் னெய்தல் கண்டெதிர் கலந்த தன்றே. (உஉ)

ஏலம்வன் மிளகு மஞ்சள் குங்கும மிலவங் கந்தன்
பாலுறு செம்பொ னல்கிப் பனிவரை விடக்கொண் டோங்கு
நீலுறு கடற்பா லெய்து நெடும்புனல் வயங்கு மோர்பெண்
கோலுறு தாயினின்று கொழுந னிற் சேக லொத்தே. (௨௩)

சொற்றிடு குறிஞ்சி தன்னிற் றோன்றுதன் பொருளே காட்டி
மற்றுள விணைக டமில வரைபடு பொருள்க ளாதி
பற்றிய முறையிற் காட்டல் பகர்தரு பொன்னி நீரா
லுற்றிடொன் றாதி யோரைந் தறிவுறு முயிர்கள போலும். (௨௪)

நகமதிற் கதழ்விற் றேய்க்கு நறியகுங் குமத்தி னோடு
மிகநிலத் தியல்பி னாலுங் கலங்கிப்பின் னியங்கு நீத்தந்
தகவுறத் தெளிந்த தாங்கோர் சார்பினிற கலக்குற் றாலுந்
திகழ்சிறு பொழுதிற் றாமே தெளிவரோ சிறந்த நீரார். (௨௫)

வேறு.

சைய முற்றமுத் தமிழ்முனி சதமக னவனுறன்
கையி னுற்றிடு கமண்டல மமிர்தவண் கலசந்
துய்ய காவிரிப் புனல்பவந் தொலைத்திடு மமிர்தம்
வைய மேலது பெற்றவர் வானவர் கணங்கள். (௨௬)

மால்ப டிந்திடு சையமே வானுல கதனிற்
சால்பு கொண்டெழு பொன்னிநீள் கற்பகத் தாரு
பால்பி ரிந்திடு நதிக்குல மாங்கதன் [illegible]
[illegible]ல்கள யாவையுஞ் சிறியகொம பினங்களைக் கடுக்கும். (௨௭)

கூறு கால்வழிப் படர்புனல் வயலிடைக் கூட்டிக்
கீறு சால்வழி மணிக்குலங் கிளர்தர வுழுது
சேறு செய்துவண் டழைவிராய்ச் சொன்முளை சிதறி
நாறு செய்குவர் களமர்க ணலம்புனை மருதம். (௨௮)

பெருகு காவிரிப் புனலன்றிப் பிறங்குநாற் றினைத்தன்
னருகு வாழ்பொழிற் பலவொடு சூதநீ டரம்பை
தருக னித்திர ளிரதமுந் தகைமலர்த் தேனுந்
திருகு றாலையின் சாறதூஉம் வளர்த்திடுஞ் சென்று. (௨௯)

பூட்டு நாஞ்சில்வெங் கொழுப்படை யூர்தரப் புலம்பு
கோட்டி னோசையுங் கருமபொடித் துழவர்கள் குலவே
றோட்டு மோசையு முழத்தியர் நடும்பொழு துரைக்கும்
பாட்டி னோசையும் பரந்திடும் பழனங்க ளெங்கும். (௩௰)

வள்ள வாய்ச்செழுஞ் சலசமுங் குமுத மென் மலருங்
கள்ளு லாமலர்க் குவளையு மதிமுகங் கனிவாய்
துள்ளு சேல்விழிப் பகையெனத் துரப்பவர் போலப்
பள்ள நீர்வயற் கடைசியர் களைந்தனர் பரவி. (௬௧)

வேறு.

மள்ளர்தம் விழியின் சாயல் கயலென மறிக்கக் கையாற்
றெள்ளுநீர் வயலு ணின்று செறிகளை களையு நல்லா
ரள்ளல வளையும் பற்றிக் குழிசியி னடைப்பர் காணிற்
கள்வனை விடுவர் கொல்லோ வுலகினிற் களைக டீர்ப்போர். (௬௨)

அலவனே ராக நாள மார்தரு கமலப் போதிற்
கலனையி னுழுது கொம்மைக் கமடத்திற் பரம்பின் செய்கை
யிலகுறச் செய்வர் மள்ள ரின்சிறு புதல்வர் செய்யுள்
வலசிறு மகளிர் பைம்பு னடுவர்கண் மகிழ்வுற் றோர்பால். (௬௩)

நெடியநீர் கொடுவந் தூட்டு நெடுவரை யிருவின் றேனும்
படிமலர்ப் புறவத் தாவின் பாலுமல் லாது பானற்
கடிகமழ் வனசத் தேனுங் கயலினம் பாய மேதி
மடிசொரி பாலு முண்டு வளர்ந்தன சாலி யெல்லாம். (௬௪)

சூக்குமை யாதி மூன்று தொழில்களுட் பட்டுக் கண்ட
[illegible]க்கெழு சொல்லிற் சாலி யிளைகருக் கொண்டு பின்னர்த்
தேக்குரு [illegible] நெரியவுள் விம்ம லுற்று
மாக்கவி னுறமேற் றோன்றிற் றன்னதூஉம் வளர்சொல் லன்றோ. (௬௫)

உதயமால் விலங்க றன்னி லுதித்தெழுங் கதிரோ யென்ன
மதியுல குவகை நீட வண்பயி ரொழுந்து செந்நெல்
சதிருற வுச்சி நின்று முதிர்ந்துபிற் சாய்ந்து தானுங்
கதிருருக் கொண்ட தன்மை காட்டிய தெவர்க்கு மன்றே. (௬௬)

விளைவுகண் டரிவாள் கொண்டு மேவின ரரியும் போது
களையினிற் பிழைத்த செங்கட் கமலமொண் குமுத மென்னுங்
கிளையுறு மலருங் கூட வரிபட்டுக் கிடந்த வம்ம
தளர்வுறி லடுத்தோர் தாமுந் தளர்வுறு மறிஞர் போல. (௬௭)

அரிந்தன விசித்துத் தூக்கி யடுத்திடு களத்திற் சேர்த்துத்
திருந்தவான் றீண்டப் பல்போர் செய்துபின் பிரித்து விட்டுப்
பரந்திடு பகட்டி னூர்ந்து படிந்தவை யுதறித் தூற்றிப்
பொருந்துபொற் குன்றி னீட்டம் போன்மெனப் பொலிக ளாக்கி. (௬௮)

முன்னிசைந் தனவூர்த் தெய்வ மந்தணர் முதலோர்க் கீந்து
பின்னளந் தரசர்க் குள்ள தளந்ததன் பிறகு நெல்லும்
புன்னில விளைவுந் தங்கள் மனைகளிற் பொருந்த வுய்த்தாங்
கன்னமும் பிறவு மன்பா லருந்துவோர்க் கருத்தி யுண்பார். (௫௯)

மின்னிய வெழிலி யூர்தி வேந்தனென் றிசைத்த லாலும்
பன்னிசை யரம்பை மாதர் பயிலுற வினிதி னெங்கு
மன்னிய தாலும் வெள்ளை வாரணஞ் சூழ்த லாலும்
பொன்னிசூழ் மருதந் தன்னைப் பொன்னுல கென்ன லாகும் (௬௰)

பொய்வதை முதலாஞ் சேனைப் பொருபவப் பகையை மோதி
மெய்யெனுஞ் செங்கோ லோச்சி விளங்கிசைத் தரும மென்றும்
வையமேத் திடத்தன் பொன்னி மருதநன் னிலமென் றேதுஞ்
செய்ய சிங்காத னத்திற் சிறந்திருந் தரசு செய்யும். (௬௧)

வேறு.

தேசுறு மருத நாடெலாநகர்கள் சிறந்திடந் நகரொலா மிலங்கும்
வாசநீ டியதா மரைச்செழுந் தடமும் வளம்பெரு செந்நெல்சூழ்வயலு
மூசுவண் டிரைக்குஞ் சோலையுங்கமுகு மொழிதரு சூதமுங் கரும்பும்
பாசிலைக்கதலி தெங்குடன் பலவும் பரமனா லயமுநல் விழாவும் (௬௨)

வேறு.

மலரின் மின்னெனப் பணவைமே லெயினர்த மகளி
ரிலக நின்றுதே னிறைத்தலி னாலோல மெனலு
நிலவு செந்தினைக் கதிர்கொள நெடுஞ்சினை வேங்கை
குலவு பைங்கிளிக் குலமெதிர் கூவிடுங் குறிஞ்சி. (௬௩)

அனைய வன்னிலத் தெயினர்கள் வெறியினி தாற்ற
வனைத ருங்களன் மணப்பர்செங் காந்தண்முன் மணக்குந்
தினையி னொண்புனங் காத்திடு சிறுமியர் சென்று
சுனையி னாடுவ ரவர்முனந் தோகைக ளாடும். (௬௪)

கருந்து ணர்ச்செழும் பூவைவீழ் கடுக்கையந் துணர்போர்த்
திருந்தி டுந்திற மத்திணைத் தெய்வத மெவரும்
பொருந்து றத்தனை யறிந்திடப் பொலங்கலை யுடனே
திருந்த நிற்பதை யுறழ்ந்திடுஞ் சிறந்திடு முல்லை. (௬௫)

கான்கு திக்குமப் புறவிடை யிடைச்சியர் கவின்செய்
தேன்கு திக்குமென் கூந்தலை நோக்கிமுன் சேர

வான்கு திக்குமற் றவர்கடம் வரிவிழி நோக்கி
நான்கு திக்கினுங் குதித்திடு நவ்வியென் றிரலே. (சகு)

நீள்க ருஞ்சினைப் புன்னைநன் னீழலுப் பறலுள்
வாளை மீனொடு வரால்களும் பொருந்துழி மதனன்
கோளி ரும்படைக் கேதகை குருகெனத் தோன்றி
மீள லுற்றொளித் திடச்செயும் விளங்கிடு நெய்தல். (சஎ)

ஓங்கு வேலையிற் பரதர்க ளோட்டுவர் தோணி
பாங்கு வேலையிற் பரத்திய ரோட்டுவர் பறவை
யாங்க ளத்தவர் குவிப்பர்க ளமைத்தவெள் ளுப்பு
தேங்க ளத்தியர் குவிப்பர்க டிரையெறி துப்பு. (சஅ)

மன்னு மால்வரை முல்லைதண் மருதநன் னெய்த
லென்னு நானிலங் களிற்றனி யியல்பிவை நிற்கச்
சொன்ன மென்மலர் கடுக்கைசெங் காந்தண்மேற் சொரியத்
துன்னு முல்லையுங் குறிஞ்சியுந் தொடரிடஞ் சிலவே. (சகூ)

ஆயர் வேய்ங்குழ லிசையொலி யகஞ்செவிக் கொண்டு
தூய சோலையி லோதிமந் துயிலவும் விழவின்
மேய வோதையின் மான்குல மருளவும் விரிசீர்
பாய முல்லையு மருதமும் புணரிடம் பலவே. (ருய)

செந்நென் மேய்ந்தெழு படர்மருப் பெருமைகள் சென்று
புன்னை நீழலின் மறியவும் புணரிவால் வளைகள்
பன்னு பூகதப் பாளைமீ தெறியவும் பாங்கின்
மன்னு நெய்தலு மருதமு மயங்கலு முரிய. (ருக)

திகழ்க ளங்கனிக் கத்துணை செய்யவொண் பவள
நிகரில் பட்டினத் தவரொதிர் புறவிடை நேர்ந்து
தகவி னெய்துவர் பொதுவியர் பட்டினஞ் சார்ந்து
பகர்வர் நித்தில மொருபடி தனக்கொரு படிபால். (ருஉ)

ஆன வெற்பிடை மணிசொரி யருவியின் சிலைப்புங்
கானி டைச்சியர் நறுந்தயிர் கடைந்திடு கலிப்பு
மான முற்றிடு மருதவொண் மணமுர சதிர்ப்பும்
வானு றுங்கடற் கனைப்புநீண் மாலையிற் றொடரும். (ருங)

வைய கம்புகழ் பொன்னிநன் னாட்டுறு வளத்தைத்
தையல் பாகநீ டிறையவன் றனெதிர் நோக்கி

யையர் சூழ்மணி மன்றுணின் றானந்த நடனஞ்
செய்யு மென்றிடி லதனையாந் தெரிப்பதற் கெளிதோ. (ருச)

பொன்னி னாட்டினிற் சிறந்திடு பொன்னிநாட் டியல்பு
தன்னி லிங்ஙனஞ் சிறிதிசைத் திட்டனஞ் சார்றி
டன்ன நாடெனுந் தனிமக ளணிநுதற் றிலக
மென்ன நீடுறுந் திருநகர் வளமினி யிசைப்பாம். (ருரு)

திருநாட்டுச்சிறப்பு முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம் எ௰அ.

---

உ

சிவமயம்.

# திருநகரச்சிறப்பு.

பொற்பு மிக்கவிந் நாட்டிடைப் பொன்னிதன் றென்பாற்
கற்ப காலத்து மழிவின்றிக் கடவுளர் போற்றச்
சிற்ப ரன்பனை யுடன்மகிழ்ந் துறைந்திடத் திகழு
மற்பு தத்திரு விடைமரு தெனும்பதி யம்ம.

கொண்ட லூர்தியும் விரிஞ்சனுங் கோடுறு கரனும்
பண்ட ரங்கனை நணுகியே வலரொடும் பணிபோ
தெண்ட ரும்புக ழுவர்பதி யென்னவு மெழிற்பே
ரண்ட மென்னவு மிலங்கிடு மனையநீள் பதியே. (உ)

அனைய மாநக ரொருதனிப் பூந்தட மதன்கண்
வினைத லுற்றொளிர் மாளிகை மண்டப மெவையும்
புனை யெழிற்கருங் குவளையுற் பலம்புகல் குமுத
நனைகொள் பங்கயச் செழுமலர் நாயகன் கோயில். (ங)

மேரு வாமரு திறையவன் மேவுபொற் கோயில்
சீரு லாமணி மறுகெழு கடல்களுந் தீவுஞ்
சாரு மந்நகர்ப் புடைமதி னேமியுஞ் சயிலங்
காரு லாமதன் புறத்தகழ் புறத்தடங் கடலே. (ச)

சுருதி யோங்கிநான் முகனெனத் துலங்குமந் நகருண்
மருவ ளாங்கருற் றெளிர்தரு மணிமதில் வலைய
மிரவி மண்டில மெனத்திகழ்ந் திடுமதைச் சூழ
விரவு தெண்டிரை யகழ்பரி வேடமொத் திலங்கும். (ரு)

சந்த மாரிடை மருதெனு நகரமே சலதி
யிந்தி ராதியர் சூழ்ந்திடக் கோயில்சூழ்ந் திலங்கு
மந்த வான்மதில் வாசுகி யெனும்பெய ரரவ
மந்த ராசலம் போன்றது வயங்குகோ புரமே. (சு)

நீடு பொன்மதி லிடந்தொறு நிகழ்ந்திடு மிடபக்
கோடு பட்டுடல் கிழிந்துசெல் கொண்டலைத் தாவிப்
பீடு தங்கிய கவிக்குலம் பிடித்ததன் புனலை
மாடு சித்திரச் சாதக வாயிடைப் பிழியும். (எ)

விண்ணி னோங்கலிற் காவல்பெற் றிருப்பதின் விரிசீர்க்
கண்ண னைக்குநல் விதிமுறை புரிந்திடு கவினு
னண்ணு நாற்றிசை முகத்தினு னெறிப்பினு னளினத்
தண்ண லொக்குமக் கோயில்சூழ் தமர்ந்திடு மதிலே. (அ)

சிகர கோபுர வாயிலிற் செறிந்திடு மிமையோர்
மகுட கோடிக ளொன்றொடொன் றுரிஞ்சிடு மாண்பாற்
றிகழு நந்திகைப் பிரம்படி தேக்கலா னுதிர்ந்த
புகரின் மாமணிக் குலத்தொடு பொற்பொடி யிறையும். (கூ)

மாக நாயக னுலகெலாம் படைப்பவன் மலர்மின்
னாக நாயகன் சித்தர்விச் சாதர ரமரர்
நாக நாயகன் போற்றுபொற் கோயிலு னடுவே
யேக நாயக னுமையுட னினிதுவீற் றிருக்கும். (ய)

பன்ன கத்தனிப் பேருல கெங்கும்வேர் பரப்பித்
துன்னி மீதல மடங்கலு முலவையாற் றூர்த்துப்
பொன்னி நாட்டொடந் நகருக்குந் தன்பெயர் பூட்டி
மன்னி நின்றிடு மொருமரு திறையவன் மருங்கு. (யக)

பேசு மம்மரு தலர்கடேய்ப் பிறைகொள்வே ணியனைப்
பூசை செய்துதன் பெயர்முத லிடைகளாற் புறஞ்சூழ்
கேச ரங்களை வருவியாக் கிளர்முத லீறு
வீசி நல்லிசை பயில்விக்கும் விமலனுண் மகிழ. (யஉ)

இலகு மத்தருப் புவிபுகழ் கயிலையென் றிசைக்குந்
திலக மான்மிய மொன்றுகொல் சிலேடையி னுலு
மலர்த ருந்தனி வெண்மையுங் கோடுமார்ந் தருகு
நிலவ ணிந்திடு வோனுமுற் றன்னதாய் நிலவும். (௰௩)

நெற்றி நாட்டத்து நிருத்தன்முன் னெடியதோர் தாரு
வற்றி நிற்குமெப் போதுமம மாண்பின தேனு
முற்றி டும்பசுந் தழைமல ருலர்ந்திடா ததனைச்
சுற்றி வந்தவர்க் களித்திடு பலன்களோ தொகையில். (௰௪)

எங்கு மண்டப மெங்கணுந் தேவர்த மிருக்கை
யெங்குஞ் சித்திர விதானங்க ளெங்குநற் றீப
மெங்கு மின்னிசைத் தூரிய மெங்குநாட் டியங்க
ளெங்குந் தோத்திர மிடைமரு திறையவன் கோயில். (௰௫)

மன்னு சீர்மரு திறையவன் கோயிலும் வகுத்தி
டன்ன தன்புற நாற்றிசை யாலய நான்கு
மின்னு செஞ்சடைக் கண்ணுதல் விமலன்றன் முகங்க
ளென்ன நூலறி புலவர்கள் புகலவுற் றிலங்கும். (௰௬)

வேறு.

ஓங்குபொற் றசும்பி னிலகுகோபுரத்தி னுறுதுகிற் கொடிகளி னீட்ட
மாங்கிரு விசும்பி னவிருடுத்திரளை யடித்துதிர்த் திடுகின்ற தென்னப்
பாங்குறு மதியுண் ணடுங்கியக் கொடியிற் படிதுகிலடிவழிப் படருந்
தேங்கிசைப் பரிதி யதுவுமுட் கொள்ளான் சிகரபந்திகளடிச் செல்லும். ()

பகர்மணிக் குவையா லலங்கலைமருவும் பண்பினூற் படர்ந்திடுங் காலாற்
றிகழுறுங் கலன்க ளூர்ந்திடுந் திறத்தாற் சிறக்கநாற் றிசையுமுற்றிடலான்
மகரமுற் றிடுவண் டணைந்துநீடிலங்கு மாண்பினு விசையொலி யதனாற்
சகரர்க ளமைத்த பெருங்கடலென்னத் தயங்கிடு நெடியபொன் வீதி. ()

தாரணி யதனைப் பழித்துவாம்பரியுஞ் சகடமுங் கொடிஞ்சியும் புனைந்து
மேருவந்தது போற்கிளர் மணிநெடுந் தேர்மிசை யிறையுலாவு மவ்வீதி
நாரணன் பிரம னிந்திர னிமையோர் நவில்சிவ கணங்கள்பா ரிடங்கள்
சீருறு மியக்கர் முனிவர்சூழ்ந் திடலாற்றிகழ்சிவ லோகமும் பொருவும். ()

விடஞ்செறி மிடற்றெம் பிரான்றினம் பவனி மேவலி னருகுநின்றிரட்டு
மடந்தையர் கவரிக் காற்றுமோங்கால வட்டமா ருதமும்வெங் களிற்றின்
றடஞ்செவி மருத்தும் பொருதிடத் தென்றல் சாளரந்தொறும்புகுந்

ளிக்கு, மிடம்பெறுவீதித் தோரண நிரையா லிரவிகாண் பரியதெப் போதும். (உ௰)

காலையிற்கடைக்கட் குவிக்குநித் திலமுங் கதிர்மணித் தோரணத்தவிழ்ந்த
மாலையுமாலைப் பொழுதினிற் புலவி மகளிர்க ளொடுத்தெறி கலனு
மாலைவிற் சொறிபூங் கணையடுமகளி ரணிமலர்க் கைசொரி வளையுஞ்
சோலையுற் றிடுங்கால் பறித்துவந்திறைக்குந் துணருமவ் வீதியிற் குப்பை.

[மென்
வனமுலைத் தடங்க ளசைந்திட லொடியு மருங்குன்மெல் லெனநடந்திடு
நிணமணிச் சிலம்பு காலில்வீழ்ந் திசைப்ப வெதிர்ப்படு காமுகர்நயக்கு
மனமுமன் மதனுந் தொடர்ந்திடக்கயற்கண் மடந்தையர் மறுகிடைச் செ
லனமவர் பின்னர் நடந்திடுங்கிளிக ளந்தரத் தருகுறச் சுழலும். [லுங்கா

கணிதரு விசும்பி னுறநிமிர்ந் தெழுந்த கதிர்மணி மேடைமுற் றத்து
நணுகிவிற் றொடிக்கைக் காந்தள்கீழாட நயனமைக் குவளைமீ தாட
விணையிலம் மனைக ளிடையினின்றாட விடையிரு பந்தெடுத் தாட
வணியிழை மகளி ராடல்பொன்னுலகி லரம்பைய ராடலிற் றோன்றும்.

தொண்டையங் கனிவாய் மாதர்பொன்மேடைச் சுடர்மணித் தொட்டிலில் வளர்த்த, தண்டளிர்த் தளவப்பசுங்கொடி கவின்கொள் சாளரச்சுற்றெலாந் தவழ்ந்து, வெண்டுகிற் கொடியிற் பற்றிமீச்சென்று வெயில்விரி ~~மணி~~முடி யிமையோர், கொண்டகற் பகப்பூங் கொம்பரிற் படர்பொற் கொடி யுட~~னிணிதுவீற் றிருக்கும்.~~ (உ௰ச)

விண்படுபளிங்கி னரமியத் தலத்து மேல்விளை யாடுமங் கையர்க்குப் பண்படுநறுஞ்சொ லரம்பைய ரணிதம் பணியொடு தொடையலும்புனைந்து சண்பகத் தொடையோ டவர்கடம்பணியுந் தாங்கொடு தரித்துவான் புகுவர், நண்புறு மவரு மிருதிறத் தனையு நவிலும்வாள் விழிகளா றெளிப. ()

மஞ்சினை நிகர்த்த மலர்க்குழன் மகளிர் வடமொழிக் கவியெளி துணர்ந்து விஞ்சையர் மகளிர்க் கெதிரிசைப் பதிகம் விளம்பலு மவர்முழுதுணரா, தஞ்சுகத் தொடுவெண் பூவையுந் தம்மி லறைதல்கேட் டதியிப் பவர்போற், பஞ்சரத் தருகு திரிவர் விண்டொடு பொன்பயி லரமியங்களின்மாதோ. உ௰௬

சுந்தர மிகுந்த பளிங்கினு லமைத்த துங்கமண் டபமிசை யொருபாற்
கந்தர மணைவுற் றிலங்கிடு காட்சி கவுரியோர் புறத்தனைப் பொருவு
மிந்திர நீலத் திலங்குமா ளிகைதன் னிடைகொள்செம் மணியொடு மொளிர்தல், செந்திரு மடமான் மருவுறு மருமத் திருநெடு மாலினை நிகர்க்கும். (உ௰௭)

உச்சியிற் கதிரோ னடைந்திடுங் காலை யொளிர்தரு பொன்னிறஞ் சிவப்புப், பச்சையி னுருவுற் றிலங்கிடு முயர்ந்த பளிங்கினி லியற்றர மியங்கண் மெச்சிடு தூரங்கர் தோற்றுதன் வடிவை விளங்குபுல் லெனவெதிர் தாவு மச்சுறு நெடுந்தேர் வலவனத் திறங்கண் டணிக்கரம் வருந்தவோட் டிடுமால். (உஅ)

குழிமதக் கவுட்குஞ் சரங்களி னொலியுங் கொய்யுளைப் புரவியி னொலியு, மெழின்மணித் தடந்தே ரூர்ந்திடு மொலியு மிலங்குபல் லியக்குழாத் தொலியும், பொழியிசைச் சுருதி முதலியவொலியும் பொலிந்தினிதெங்கு மோங் குதலான், மொழியுமந் நகரிற் கடலொலித் திடலு முகிலொலித் திடுவதுங் கேளா. (உக)

ஆலயி னிடத்திற் கிளர்நறும் புகையு மந்தணர் புரிந்திடு வேள்விச் சாலையி னெழுந்த புகையுமொண் கூந்தல் சார்ந்திடு சுரும்பின மகல, வேலையிற் கணவ ரிடுமகிற் புகையும் விசும்பின்மேற் சுழல்வது நோக்கிச், சோலையிற் குயில்வாய் திறந்திடா தொளிக்குந் தோகையின் குழாமெதிர் நடிக்கும். (கூ0)

விளங்கிடு மறையோர் மாடநீள்வீதி வெண்சுதைத் தண்கதிர் பரப்பி வளங்கெழு கலைகண் மருவிமீ தெழுந்து மகத்தொடும் பயின்றுநேர் கண்டோ, ருளங்களிகூரப் புலவர்கொண் டாடு முயர்ச்சிபெற் றிலங்கிடுந் திறத்தாற், களங்கமின் மதிக ணிரையொரு கோடி கலந்துவீற்றிருப்பது கடுக்கும். (கூக)

வாங்கொலிக் கடல்சூழ் புவிபுரந் தருளு மன்னவ ரியாவரு மீண்டித் தாங்களுற்றிடும்வீ றுடுமலைந்திருக்குந் தகைமையொத் தரசர்வாழ்வீதி யோங்கலிற் றோன்றிச்செம்மணிக் கதிர்கொண் டுலவுகா ரிருட்குழா மொதுக்கிப், பாங்குறுமாட மாளிகைக் குலங்கள் பரிதியின் கணங்களொத் திலங்கும். (கூஉ)

புகழொடு தனமுந் தருமமும் பொறையும் போற்றிடு வணிகர்தம் வீதித் திகழுறு சிகரத்தணிநவ மணிகள் செறிந்தொளி புரிந்திட நோக்கி மகிதலத் தனைய ஞதிமண் டலத்தின் மருவுறு கோளின மயங்குந் தகவுற மனைக ளலகில்செல் வத்தாற் றனித்தனி யளகையின் விளங்கும்.

மன்னவர் தமக்கு மணிமுடி சூட்டும் வளங்கொள்வே ளாளர்தம் வீதித் துன்னிய செல்வக் கதிர்மணி மாடத் தொகுநிரை யிந்திரன் றனக்கு முன்னவர் முகில்காத் தியற்றிடு முதவி முன்னின னுளங்களி துளும்ப தன்னெழில் விமான மெனப்பல வமைத்துத் தந்தனவிருப்பது போலும்

கண்ணுறுஞ்சிகர வரைபடு பொருளுங் கானிடைப் படுபொருட் குலனுந்
தண்ணுறு மருதத் திணைபடு பொருளுஞ் சலதியின்பாற்படு பொருளு
நண்ணுறுஞ் சலதி யிடைப்பொலிந் தோங்குநகர்படு பொருள்களு மேனை
விண்ணுறு பொருளுங் கவின்குடி யிருக்கும் வீதியில் வயின்றொறும் வி
ளங்கும். (௬௫)

வானவர் மகுட முரிஞ்சுபொற் றுகளு மற்றவர் புனைமலர்த் துகளு
மாநிலந் தனைவிட் டெழுந்திடா தடக்கு மாளிகைக் கொடிபடிந் துதறு
மேனதித் துளியுஞ் சண்பகத் தருக்கள் விரித்திடு மலர்மதுத் துளியுங்
கானமுற் றிலங்குஞ் சிவிறிநீர்த் துளியும் விழவறாக் கண்ணகன் மறுகின்.

வேறு.

மாந்தளி ரஞ்சி லோதி மடந்தையர் வடிவு காட்டு
மேந்தெழிற் கமுக மன்றொ ரிழையணி மிடறு காட்டும்
வாய்ந்திடு மூருவின் றன் வனப்பினைக் கதலி காட்டுந்
தேந்துளி யிலவின் போது சேயிதழ் காட்டு மெங்கும். (௬௭)

மிகவிரி பாளை போர்த்து விளங்குதெங் கிளநீ ரன்றோர்
துகிலொரு புறமேற் கொண்ட துணைமுலை காட்டுங் காவிற்
றருகொடி யிடைகள் காட்டுந் தடமுறு நளினம் யாவும்
மகமலர் காட்டும் வண்டு முகத்துறு கண்கள் காட்டும். (௬௮)

வேறு.

மந்த மாருதம் பயின்றிடை மருதினெம் மருங்குஞ்
சந்த முற்றொளிர் சண்பக முதலிய தழைந்து
கந்த மார்தரு பொழிலெழில் கண்டவர் மகவா
னந்த னந்தன தெழிலினை நவிலநா ணுறுவார். (௬௯)

எண்ட ரும்புக ழுலகெலாம் மெய்திடை மருதில்
வெண்டணிக் கலை மதிச்சடை விமலர்தம் விழாவிற்
பண்டருங் கனி மொழியெழிற் பாவைய ராடல்
கண்டிலா தவர் திலோத்தமை யாடலிற் களிப்பார். (௭௦)

எங்க ளீசர்வீற் றிருப்பதூஉ மாலயத் தெழிலும்
பொங்கு தண்புக ழிடைமரு தெனுநகர்ப் பொலிவுந்
தங்கி வாழ்பவர் மகிழ்ச்சியுஞ் சார்ந்தெதிர் கண்டோ
ரங்க ணோர்சிவ னுலகினை யகத்தினில் விரும்பார். (௭௧)

வேறு.

மொழிதரு மொருமை தன்னே டிருமைசெய் முத்தி வேட்டுச்
செழுமறை நான்கு நன்குய்த் தெளிந்துமற் றையந் தீரப்
பழுதக லங்க மாறும் பயின்றர ணிடத்தி லன்பு
மெழுதரும் பிறவி யெட்டா தியற்றிநாள் கழிப்பர் சில்லோர். (உ)

பத்தியிற் காமி காதி பகருமா கமங்க ளாய்ந்து
நித்தியப் பொருளென் றோது நிமலனைப் பூசித் துற்றோர்
சத்திநி பாத மோர்ந்து சார்ந்திடு கலைக ளோர்ந்துஞ்
சுத்திசெய் திகலும் பாசந் தொலைத்தகற் றுவர்நாள் சில்லோர். (ங)

கல்வளை கணைய மாதி கரங்கொடு சுழற்றி யுங்கை
மல்லொடு வடிவா ளாதி மற்றொழில் பயின்றுந் தான
வல்லிபந் துரங்க மூர்ந்தும் வருத்திடு கலைக ளாய்ந்துஞ்
சில்லியந் தடந்தே ரூர்ந்துஞ் சிலர்க்குறு பொழுது போமால். (ச)

விரிபொரு டம்பா லுள்ள வேண்டுநர்க் கினிதி னீந்தும்
புரிதரு மவர்தஞ் செங்கைப் பொருளெதிர் முறையி னேற்றும்
வரிமலர்ச் சோலை பார்த்தும் வயலுறு வளமை பார்த்துந்
தெரிவுறு கேள்வி யுற்றுஞ் சிலர்க்குறு பொழுது போமால். (ரு)

துலங்குகா விரியிற் பூசத் துறைப்புன லாடல் செய்து
நலம்பெறு நியம முற்ற நடாத்தியுங் கலைக டேர்ந்தும்
பலன்றரு மருத வாணன் பணிவிடை புரிந்து மன்னோன்
சிலம்பணி பதம் பணிந்துஞ் சிலர்க்குறு பொழுது போமால். (சா)

வேறு.

கொடிபடு நெடிய மாளிகை வீதி குலவுறு மனையபொற் பதியி
லடிபடன் மணிவார் செறிந்திடு முரசே யமைவடுப் படுவன மாவே
கடிமது வருந்தல்சிறைகொள் வண்டினமே கட்புன லுகுத்தல்பைம்பொ
ழிலே, படியுறு குளனே யலைபடல்சிறுமைப் படலெழிற் பாவைய ரிடை
யே. (எ)

காரண மின்றிச் சினத்துட னெதிர்த்துக் கடுஞ்சமர் விளைத்தல்செஞ்சூட்டு
வாரண மதுவே திரித்திடு கோட்டு வளம்பெறு பெருமையும் விளக்கு
மேரண வுருவ மதனனே தன்னே டெதிர்த்திடா திருப்பவர் தம்மேற்
றூரண முறுநீ டம்புக ரெக்குந் தடித்துறு முகிமத் லுதகைத்தால். (அ)

இரிதரு பறவைக் குலங்களே யன்றிச் சிறைப்படு முயிர்க ளங்கில்லை
விரிதரு பயமுற் றொளித்திருந் திடுதன் மீனின மன்றிவே றில்லை
வரிதரு மகளிர் கடைக்கணே யன்றி வழிநெறி கடப்பன வில்லை
யுரிமையுற் றொருவர்க் குதவிசெய் யாத தோவிய மன்றிமற் றில்லை. (சகூ)

வேறு.

அணிமருவு மிடைமருதீ சருக்கு நந்தி
யாவடுதண் டுறைசோமாக் கந்த ராரூர்
திணிபுகழா லங்குடியிற் குருமூர்த் தியானைத்
திருமுகத்தோன் வலஞ்சுழியே ரகத்திற் செவ்வேள்
கணிதருமாப் பாடியிற்சண் டேசன் றில்லைக்
கதிர்ப்பொதுவி னடக்கடவுள் வடுகன் காழி
பணிமருவு மாந்துறையி னிரவி யாகும்
பரமனெழிற் பதமலருக் கன்பு மிக்கீர். (ரு௦)

அன்னதனித் தலத்தினுறு மெழிலை நோக்கு
மாதரங்கொண் டிந்திரனு மிரங்கண் பெற்றான்
பன்னகநா யகனுமந்தத் தலத்தின் மாட்சி
பகர்வதற்கே யணையதொகை முகங்க ளுற்றான்
றுன்னுபிற சுரர்களுமன் னதனோர் நோக்கத்
துலங்கிடுகண் ணிமையாம லிமையோ ராகு
மொன்னவுறைத் திடத்தருமந் நகரின் பொற்பை
யாமெடுத்திங் கிசைப்ப தனுக்கிசையு மன்றே. (ருக)

திருநகரச்சிறப்பு முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம். ௧௨௩.

௳

சிவமயம்.

# நைமிசாரணியச் சிறப்பு.

முன்னமோர் காலந் தன்னின்மா தவத்து முனிவர்க ளியாவருஞ் சென்று நன்னர்செய் வனசப் பொகுட்டின்வீற் றிருக்கு நான்முகக் கடவுள்பா லடைந்து, பொன்னடி வணங்கிக் கருணையங் கடலே புவியிடை யாங்களு ண் மகிழ்ந்து, துன்னுநற் றவஞ்செய் தரும்பல னடையச் சொல்கவோ ரிடமினி தென்றார். (க)

மற்றவர் மொழியுட் கொண்டலர் மிசையோன் மருங்குறு மொருத ருப் பையினைப், பற்றியோர் நேமி யாக்கியங் கதனைப் பார்மிசை யுருட்டி முன் னீவி, ருற்றிடு மிதன்பின் னடந்திடு மிதுசென் றுறைந்திடுங் கானக மதுதான், குற்றமில் குணத்தீர் நல்வழியென்னக் குறித்திடு மூதுரை கொ டுத்தான். (உ)

இரவிவீற் றிருக்கு மெழுபரித் தடந்தே ரோற்றிடு நேமிசென் றிடுத லொருவியப் பலவென் றுரைத்திடத் தனித்தாங் கூர்ந்திடு நேமியின் பின் ன, ரிருடிக ளெவரு மயன்விடை மேற்கொண் டேகின ரதுபகீ ரதியாந், திருநதிப் பாங்கர்க் காசியின் வடகீழ்த் திசையினிற் சென்றுதங் கிய தால். (௩)

தூமறை யுருக்கொண் டேகுவதென்னத் தொடர்ந்திடு மாதவ முனி வர், நேமியங் குறையக் கண்டனர் தாமும் நின்றனர் நிறைதவ மியற்றி யேமமுற் றிடுநற் றலமிதே யென்ன விலங்குமக் கானகந் தனக்கு, நாமமி ந் நேமி தங்கிய திறத்தா னைமிச மெனப் பொருந் தியதால்.

மாயனை நிகர்க்கும் பூமணம் பெறலான் மயின்மிசை யிருப்பதா லெ னையாள், சேயினை நிகர்க்கும் கொண்டலூர்ந் திடலாற் றேவர்க ளிறைவ னை நிகர்க்கும், பாயதா மறைதங் கலின்விதி நிகர்க்கும் பசுமையா லுலகி னை யீன்ற, தாயினை நிகர்க்குங் கலைநிறைந் திடலாற் றண்மதி நிகர்க்குமவ் வனமே. (ரு)

வேறு.

அணிதரு கோங்க மெங்கு மதனரு சோங்க மெங்குந்
திணிதரு தமால மெங்குஞ் செறிநரந் தமால மெங்குந்
தணிவில்லைபங் கோல மெங்குஞ் சாற்றுதற் கோல மெங்குங்
கணியுடன் சால மெங்குங் கலந்திடு விசால மெங்கும். (சு)

தவளித வருக்க மெங்குந் தாதகி வருக்க மெங்கு
மவமில் சம்பகங்க ளெங்கு மலர்கொள்சம் பகங்க ளெங்குங்
குவிதரு கடுக்கை யெங்குங் குருந்தில கடுக்கை யெங்குந்
தவவொளிர் சோதி யெங்குந் தழைந்தெதி ரிருத்தல் கண்டார். (எ)

காவுற வளருந் தேமா புளிமாநற் கருவிளந் தண்
கூவிள மருவுஞ் சீருங் குலவுகாய் கனியின் சீரும்
பூவுட னிழலின் சீரும் புகலுநேர் நிரைய தாகிப்
பாவுறு சீருமெங்கும் பார்த்தனர் மகிழ்ச்சி பெற்றார்.

அன்னதில் வேள்விச் சாலை யருட்கதை கேள்விச் சாலை
துன்னிடு யோக சாலை சுவைதரு பாக சாலை
வன்மறை நவிற்று சாலை வளர்தவ மியற்று சாலை
யின்னபல் சாலை செய்தங் கிருந்தனர் தவஞ்செய் கின்ரூர். (கூ)

வேறு.

கரங்கொடு பன்ன சாலைகள் புதுக்கக் கட்டிநின் றிபக்குழாங் களிக்கு முரங்கிளர் கலைக ளிறந்திடு கலையி னுரிகொடு முனிவர்முன் விரிக்கும், குரங்கினங் கிழங்கு தருப்பைமா விலைதேன் குறித்திடு சமிதைகொண் டளிக்கு, மரங்களுந் தாமே வணக்கமுற் றருகே மலரொடு காய்கனிகுவிக்கும். (ய)

நடனுறு மயில்கட் குலவுபச் சோந்தி நறுங்கனி பறித்தெதிர் நீட்டும் படவர வதன்மேற் படும்வெயில் மயில்கள் படர்சிறை விரித்தினி தோட்டுங், கொடுவரிக் குலந்தம் மடிசுரந்திடுபால் கோவிளங் கன்றினுக் கூட்டும், வடுவறு மடங்கன் மறந்தருந் தொழிலை மறந்தருந் தவநெறிகாட்டும்()

பொழுதினுற் றிறைஞ்சிக் கிள்ளையைத் தீஞ்சொற் பூவைமற்றிருவென விருந்தாங், கெழுதுசித் திரத்தி னடங்கிவாய் செவியா யெழிற்சிவ கதையமு தருந்தி, முழுதுமுள் ளத்துள் விடாதமைத் தேக மொழிந்தபின் ~~னேகிடுந்~~ தெய்வந், தொழுது பைங்கிள்ளை முகமலர்ந் துரைக்குந் தொகுத்த னகத்தினிற் ~~பொருந்த~~. (யஉ)

வேறு.

இத்தகைப் பெருஞ் சிறப்புற விருந்திடு நாளி
லுய்த்திடுந் தவத் ததீசிமிக் குயர்சதா னந்தர்
சித்தர் கண்ணுவ ரத்திரி திரிசடி யாதி
மெய்த்தவத் தினோர் கூடிநல் வேள்வியொன்றிழைத்தார். (யங)

அந்த வேள்விபார்த் திடும்பொருட் டருந்தவச் சூதன்
சந்த முற்றகண் மணியொடு தயங்குவெண் ணீறுஞ்
சுந்த ரம்பெறத் தரித்திடு மிடந்தொறுந் துலங்க
வந்த ணைந்தனன் கண்டனர் மாதவத் தவர்கள். (யச)

உவகை யுற்றெழுந் தெதிர்கொடு முகமனன் குரைத்தோர்
தவிசின் மீதுற விருத்தினர் தாங்களு மிருக்க
நவையில் சூதனு மவரவர்க் கிசைந்தன நவின்ரு
னவி யளித்திடு வேள்வியு முடிந்ததாங் கதன்பின். (யரு)

மாதவத் தினோர் சூதனை நோக்கிநும் வதன
சீத பங்கய மலர்ந்தெதிர் செப்பினீ ரனந்தங்
கோதி லாதநற் றலங்களுந் தீர்த்தமுங் குலவு
மீதிவற் றரன் றலக்கதை விரும்பினே மின்னம். (௰௬)

அத்தலஞ் சிறு பொழுதினி லகத்தினிற் குறிக்கு
மெத்தகைப் பெரும் பயன்களு மெளிதினிற் கொடுக்கு
மித்தகைத்த தாய்க் கொடுவினை யெவையுமாற் றுவதாய்
நித்த னன்புறு மிடத்ததாய் நிலவிட வேண்டும். (௰௭)

வேத வாகம புராணமாம் விளங்கிருங் கடலை
யோது நும்மதி மந்தரங் கொடுகடைந் துதிக்குந்
தீதிலத் தலக் கதையெனுந் தெளிவுறு மமிர்தை
யேதில் வாக்கெனுங் கரத்தினு லெந்தமக் கருள்வீர். (௰௮)

என்று ரைத்தனர் சூதன்மற் றிகலுமைம் புலனும்
வென்ற மாதவ முனிவிர்நீர் விருப்புறு தலமு
மொன்று பாரிடை யுளதிடை மருதென வோதுந்
துன்று சீரினை மருவிய தலமெனச் சொல்லி. (௰௯)

திரு மகிழ்ந்துறைந் திடமிடை மருதினைச் செல்வ
மருத வாணனைப் பெருநல மாமுலைக் கொடியைக்
கருதி நீடெழு மானந்தக் கடலிடை மூழ்கி
யொருமு கூர்த்தமங் கோவிய மொத்திருந் ததன்பின். (உ௰)

வெதிரி மாவனத் திருந்திரு வேதங்க ளனைத்துஞ்
சதுர் விதப்படுத் திசைத்திடு வியாதனுந் தவத்தோன்
புதிய வின்னமு தென்னவீ ரொன்பது புராணங்
கதி யுறும்படி யெமக்குமுன் கருணையைத் துரைத்து. (உக)

விரவு மின்னவை தவத்துட னருளுறு மேலோர்
பரவு காதலின் வினவிடிற் பகரொன்று னவற்றுண்
மருவு மீசன்மா லயன்பகல் வன்னிமற் றிவர்க்கு
நிரல்கொள் பத்துநான் கிரண்டட னிகழ்த்துமொவ் வொன்றும்.()

காமனைப் பொடி செய்தவற் குரியன காந்தம்
வாமனம் பிர மாண்டமொண் மார்க்கண்ட மிலிங்கங்
கூர்மமச் சம்வ ராகமே பவுடிகங் குறிக்கு
நேம முற்றிடு சைவமென் றிசைக்குமீ ரைந்தும். (உ௩)

காரணன் றனக் குரியவை யாரதம் விண்டு
காருடர் திகழ் புரவை தப்பெருங் காதை
யாரணற் கியல் பதுமமும் பிரமமு மருணற்
கோரும பிர்ம்மகை வர்த்தமாக் கினேயந்திக் கோதும். (௨௪)

ஈசனிடைக் காந்தமு மிலிங்கமு மிரவி
மாசில் வண்கதைப் பிர்ம்மகை வர்த்தமு மருவி
வீச தின்புக ழிடைமரு தெனுமதன் பெருமை
பேசு மன்னவை யுமக்குநாம் பெரிதுரைத் திடுதும். (௨௫)

என்ன மாதவர் மகிழ்வுற வெதிர்விரித் துரைத்தா
னன்ன வன்றிருப் பதமல ரகத்தினுஞ் சிரத்து
மன்ன வைத்தவ னிசைததவா வடசொலா மதனை
யுன்னு தென்சொலிற் புகலுவாந் தமிழிேனா ருணர. (௨௬)

வேறு.

உரைதரு தலவி சேட மூபதேச மகிமை யீசன்
றிருவிளை யாடல் வெற்பின் சிறுவிதன் றவத்தி னாற்றல்
பரன்றனைப் பூசை செய்த பரிசுவெங் கொடியொன் றூடி
விரவுபொன் னிறமாய்ப் பின்னர் வெள்ளிவெற் படைந்த வாறு. (௨௭)

உரோமசன் பூசை மற்றை யோதுமார்க் கணடன் காதை
தராதலம் புகழ்சு கீர்த்தி மன்னவன் றன்மை மேன்மை
விராவுகா சிபனறன் காதை வெற்றிவேற் குமர னெய்திப்
பராவல்செய் திறையோன் றன்னைப் பரிந்துபூ சித்த தன்மை. (௨௮)

வானுத லிமயச் செல்வி மன்னுகா ருணியத் தீர்த்தம
பாணமா தீர்த்த மோங்கு பராசர தீர்த்த மேன்மை
சேணலச் சோம தீர்த்த திகழுருத் திரமா தீர்தத
நாண்மலர்ப் பதுமப் போரா னண்ணிய புனித தீர்த்தம். (௨௯)

மிக்கபாண் டவர்க ளர்த்தம் விண்புரந் திடு[illegible] றைதித்
திகிறை யவுர்க ளர்த்தந் திருவுறு கண்ண தீர்த்தந்
தக்கசீர்க் காக தீர்த்தஞ் சாற்றிடு கெங்கா கூபஞ்
சக்கர கருட தீர்த்த முதலிய தசதீர்த் தங்கள். (௩௰)

கச்சப தீர்த்த நீடு கவுதம தீர்த்தம் யாரு
மெச்சுகல் யாண தீர்த்தம் விளங்கிடு சேட தீர்த்தம
விச்சைகொள் கந்த தீர்த்தம் வெள்ளைவா ரணத்தின் றீர்த்த
மிச்சையி னியம்ப லுற்ற விவ்வகைத் தீர்த்தக் காதை. (௩௧)

தெரிதரு வீரசேனன் சித்திர கீர்த்தி யெங்கும்
விரிதரு சீர்த்தி விச்வா மித்திரன் கூடலுற்ற
வரகுணத் தென்னன்காதை வலனுறு நலனயோத்தி
வருயுவ னாச்சுவன்சீர் மாந்தாதாப் பெற்ற பேறு. (௩௨)

மாசறு வசுமன்னன்சீர் வளாஞ்சத் துவசன் காதை
வீசுறு புகழ்செய் தேவ விரதனந் தகன்றன் வண்மை
பூசமான் மியத்தின் றன்மை பொதியுறு வாடன் மீன்க
ளீசனீ டருளினுவி யெய்தல் பொன் வளவன் றன்மை. (௩௩)

சுனகன்மார் முத்தி யெய்தல் சொற்றிரி யம் பகன்சீ
ரிணங்கிடு மினைய யாவு மிருபதனைந் திரண் டிரண்டின்
கணங்குலாஞ் சருக்க மாக்கிக் கருதிடு விருத்த மென்னு
மணங்குலாங் கவிதை நன்றால் வகைபட வுரைத்தல் செய்வாம்.

நைமிசாரணியச் சிறப்பு
முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம் ௩௫௫.

உ

மருநீசர் துணை.

# தலவிசேடச் சருக்கம்.

புவனம் யாவையும் படைத்தவன் பொருந்தொரு காற்றேர்க்
கவன வாம்பரி நின்றினைப் பாறிடக் கருதிச்
சவி மணித்திரள் கொண்டுமுன் சமைத்ததே யென்னத்
தவ நிமிர்ந்திலங் கிடுவது சையமாம் பொருப்பு. (க)

மொழிந்தி டப்பலை யிடத்துறு முதிர்ந்தசூன் மந்திக்
கெழுந்த வன்பொடு கடுவனீ டுமுலெடுத் ததன்வாய்ப்
பிழிந்த தேன்வழிந் தருவியா யிடந்தொறும் பெருகுஞ்
செழுந்தண் சாரலி னொருபகல் சிறந்துமி யிருந்து (உ)

சுத்த மாதவ வசிட்டனே சுமந்தொடு விசுவா
மித்திரன் புகழ்க் கவுதமன் முதலிய மேலோர்
மெய்த்த வம்மகந் தருமங்கள் செயிற்பலன் மிகவு
மெத்த லந்தரும் விளைவினி லென்ன வாய்ந் தனரால். (௩)

ஒருவர் காசியென் றிசைத்தனர் தில்லையென் றுரைத்தா
ரொருவர் சோணமா சைலமென் றோதின ருயர்மற்
றொருவர் நீடெழிற் கமலையோ வென்றன ருகந்தாங்
கொருவர் கூடலோ வெனப்புக லுற்றன ரொருவர். (ச)

உற்ற வேலையிற் குன்றுதோ றாடுத லுகந்த
கொற்ற வேற்படைச் சூர்ப்பகைச் சேவலங் கொடியோ
னெற்று தென்டிசைக் கடன்மிசை யிரவிதோன் றுதல்போற்
சுற்றும் வானவர் சூழ்ந்திடத் தோகைமேல் வந்தான். (ரு)

கண்ணுற் றார்வமோ டெழுந்தனர் கதுமெனப் பணிந்து
பண்ணுற் றார்துதி யரியணை யீந்தனர் பரனு
நண்ணுற் றுனெதிர் பூசனை விதிமுறை நவின்று
ரொண்ணுற் றார்தவ மென்செய்தோ மிவண்வர வென்ன. (சு)

அங்கதன் பினர்ச் சிறுவனை தாழ்ந்தரு கணைவுற்
றிங்கு வேள்வியொன் றிழைந்திடக் கருதின மியாங்க
ளெங்க ளீசர்தம் புதல்வமற் றியாவையு முணர்ந்தோய்
புங்க முற்றிடு மன்னது புரிந்திடு போதின். (எ)

மந்தி ரத்தினிற கிரியையில் வளர்திர வியத்தில்
வந்து சேரினு மொருகுறை மருவினா ளரக்கர்
சிந்தி டாவகை நனதுமான் மியத்தினுற் சிறப்ப
தெந்த மாதல மிகுபல னதுதரு மென்றார். (அ)

இத்திறம் புகன் முனிவரை நோக்கிவே வினையோ
னுத்தமத் தனிப் புராணங்க ளுமையவட் கெங்க
ளத்த னோதுநாண் மிகுவினை யாட்டொடு மவற்றை
யுய்த் துணர்ந்தன னவளிடத் திருந்தஃ துரைப்பேன். (கூ)

நீவிர் கேண்மினீ மகிழ்ந்துறை தலனெது நிகழ்த்தென்
றுவ லுற்றனை வினவின ளஃதுமுன் னிசைத்தே
மேவு வாலையான் மறந்தனை விளம்புது மின்னும்
பாவு சோதிநற றலங்களென் றிரண்டுள பகரின். (ய)

சோதி யென்பதோர் ஞானமென் றுரைத்தது தூய
வேத மாகமம் புராணமவண் மிருதிகள் குரவன்
றீதில் யோகிகண் மந்திரஞ் செங்கதிர் கனலி
யோது மந்தணர் விபூதியென் றிவற்றினு முறைவோம். (யக)

தரணி தன்வயிற் றிகழ்ந்திடு தலங்களோன் றென்ற
தருணை காசிகா ளத்திகே தாரந்தென் னுரூர்
திருவ லஞ்சுழி யேரகந் தில்லைவெண் காடு
மருவு தண்பொழிற் குடந்தைபொன் வளரிடை மருது. (யஉ)

ஆதி யாகிய முத்திதந் தருளிடு தலங்க
ளோதி டப்புகி லனேகமுண் டவற்றினு முறைவோங்
கோதி லாங்கவற் றிடைமரு ததிகமாய்க் குலவும்
யாதினு லெனில நாதியா யிலங்கலி னென்னு. (ம௩)

அத்த லத்துறு மகிமையுஞ் சிறிதெடுத் தறைந்தான்
மெய்த்த வத்தினீ ரத்தல மேன்மையே யாகு
நித்த னம்பிகை யுடனங்கு நிலவுமெஞ் ஞான்றுஞ்
சித்த மின்புறு பலன்றருஞ் செனமினுங் கென்றன். (ம௪)

மாத வப்பெரு முனிவர்கள் வரையுரம் பிளந்த
சோதி வேற்படைக் கரதலத் தோகைவா கனத்து
வேத நாதவத் தலத்துற விசேடத்திற் சிறிதின்
டோது கௌறனர் கருணைகூர்ந் தனையவே ளுரைக்கும். (ம௫)

வேறு.

தகைமைபெறு முயர்சம்ப காரணியஞ் சத்திபுரந் தபோவ னஞ்சீர்
திகழ்சோதி நகர்சருவ சித்தபுரம் வில்வவனஞ் செல்வ நாளு
மிகுதரும விருத்திபுர முத்திபுர மிடைமருது வீர சோழ
நகரமெனப் புவியிடத்துச் சிவலோக மெனுமதன்ற னமை மாகும். (ம௬)

கருதுபுகழ்ப் பராசத்தி விமலமுறு தனியிதய கமல மென்னப்
பொருவிலதாய்ப் பூரணசின் மயானந்தத் தனிச்சோதி புவனம் போற்ற
விரவலுறு செழுங்கருணை யுடனிருக்கு மிடமாகி விளங்குந் தான
மருதவனத் திடைமேவி யிடைமருதென் றிறைமம் வயங்கிற் றன்றே. ()

கொத்துறுசண் பகவனத்தாற் புகல்சம்ப காரணியங் குலவு முன்னர்ச்
சத்தியணைந் துறைதலினுற் சத்திபுர முயர்முத்தி தருத லாலே
முத்திபுர மிறைசோதி யானதனுற் சோதிநகர் மொழியும் வில்வ
மத்தமெனச் சூழ்ந்திடலால் வில்வவனம் பிறவுமங்காங் கறிய லாகும். ()

வேறு.

நற்ற வம்புகழ் தருமநல் விரதமெய்ஞ் ஞானஞ்
சொற்றி டுந்திடம் பொறைநலந் தொகுபொரு டம்மை
யுற்ற வேள்வியைச் சராசர வுயிர்த்தொகை தம்மைப்
பெற்ற தாயென வளர்ப்பது பேரிடை மருது. (ம௯)

வேறு.

கோலமுறு மனையாக ரிடத்துற் றோர்கள்
கோகனகன் விதித்தவிதி தனையும் வெல்வர்
காலனச்சங் கனவினிலு மவர்கட் கில்லை
கருதுமந்தப் பதியிடத்தி லவனும் வாரா

னேலுமவன் றாதருக்குத் தினமுஞ் சொல்வா
னிடைமருதின் மறந்துமனே திடேன்மி னென்னப்
பாலினவ்வூ ரினர்களெதிர்ப் படினு மஞ்சும்
பார்க்கினருங் குறள்கணத்தோர் வெருள்வ ரென்றே.

பூதலத்தி லுயர்ந்தவிடை மருதின் மேவும்
புண்ணியர்க்கு நவக்கிரகத் திடுக்க ணில்லை
பூதமொடு பசாசுதான் வாரா வினனல்
பொருந்தாது வயிரவன்றன் றுணை தன்றுற
பூதமுறு தவந்தானம் மியோகமாதி
புரிந்திடுங்கா லிடையூறு புணராதாமும்
பூதமுறு மினியபுகழ் ஞானமீடும்
புத்தியொடு முத்தியது மெளிதினுமே.

அந்தவளம் பதியிடந்தோர் கவளமன்ன
மருந்திடநீ ரணுவளவு செம்பொன்றான
மந்தணர்கட் களித்தவர்கள் கயிலைசேர்வா
ரகஞ்சமைத்திந் தவர்தின்கல் லாதிநன்ம
ணந்தமொரு தகட்கயுத யுகமீசன்பா
லமர்ந்திருப்பார் விளைநிலனுக் கரன்போலாவ
ரந்தமுறு கன்னியைத் தானமாக
வளித்தவர்க ளரவணையோன் பதவிசேர்வார்.

தருவுதவு கனிகளொடு காய்கண்மூலஞ்
சந்தனம்வெள் ளிலைகமுகந் தயிலநெய்பால்
மருவுகலை கவிகைபா துகைநீள் கட்டில்
வழங்கினர்கள் வேண்டுமின்ப மருவிவாழ்வார்
குருடரொடு செவிடர்பித்தர் பிணியருமர்
குறையுடையோர் முடவர்முது கிழவரொன்னும்
பொருளிலர்க ளெவரேனு மவர்கட்கன்னம்
புரிந்தளித்தோ ருலகமெல்லாம் புரப்பர்தாமே.

விடத்தனியொண் மிடற்றிறைவ னடியார்கட்கு
விருப்பினொடு மடஞ்சமைத்தாங் களித்திட்டோர்க
ளடுத்திடுமென் கலைகொடுத்தோர் சொன்னமன்ன
முதவினோ ரிம்மையிலுஞ் செல்வமின்ப
மடுத்திருந்து மறுமையினு நெற்றிமேற்க
ணமர்ந்திலங்கப் பாரிடங்கள் சூழவாழ்வார்

கொடுத்திடுவோர் பெறும்பலன்மற் றொருவர்க்குண்டோ
கூறுவது முலகமவர் புகழேயன்றோ. (உச)

புறநகரிற் பரிமேதம் வாசபேயம்
புகலுமக்கி னிட்டோம மிராச சூயந்
திறனுச்செய் திடுபலனுங் கங்கை யாதித்
தீர்த்தமெலாம் படிந்துவரு பலனுந் தூய
வெறியுதவு மிடைமருதில் வதிவோர் கட்கு
நேருமனு தினமுமங்க ணினிது செய்யு
மறமெவையுந் திலமளவு மேரு வாகு
மல்லதுமெற் பெள்ளளவு மாகாதென்றே. (உரு)

சுருதியிழந் திடுமறையோ னுங்கு மேவிச்
சோதியினைப் பணிந்திடற்கு ரியனே ராவன்
றரணியிழந் திடுவேந்தன் றரணி சேர்வன்
றக்கபொரு ளிழந்தவர்கட் கதுவந் தெய்தும்
பொருபகைமை தவிரவெண்ணிற் றவிரு மோங்கு
புதல்வருற வேண்டினோற் புதல்வ ருண்டாம்
மருவுபிணி நீரவெணிற் றீரு முத்தி
வழங்குநகர்க் கிவைகளொரு வியப்போ வம்மா. (உசு)

வீசுபுகழ் மருதீசர் தமக்கு நெய்பால்
வெண்டயிர்தே னுதிகன்னென் றாட்டி டுவோர்கள்
வாசமொடு மலரளித்தோர் தூப தீபம்
வகுத்திட்டோ ரனமாதி நிவேதித் திட்டோர்
தேசுபெறு சிவலோகத் தினிது வாழ்வர்
திகழாடல் பாடலிவை செய்வித் தோர்கள்
பேசுமெழிற் கயிலையினி டூழி காலம்
பிரியாது வாழ்வர்சிவ கணங்கள் போற்ற. (உஎ)

இடைமருதீ சனைப்பணிதற் கொருவ னொன்னூற்
றெழுந்திடி லங்கவர்வினையு மெழுந்து நிற்கு
நடையுறிலவ் வூர்நோக்கிப் புறவூர் நோக்கி
நடக்குமது சொல்லாம லவர்க ளேகத்
திடமிலரா யுடனொருகாற் றிரும்பி னுலுந்
திரும்பாது சென்றவினை சென்ற தேயாம்
புடவிபுகழ் காசியினுற் றிலகு கங்கைப்
புனல்படிந்து வருபலன்மற் றவருக் கெய்தும். (உஅ)

## வேறு.

கொலைபுரி வினைசெய் தோர்கள் குலவிடை மருதர் செய்ய
மலரடி வணங்கற் கெய்தின் வாயிலின் புறத்தே!மிக்க
மெலிவொடு நிற்கு மன்னோர் வெளிவரிற் குனிந்து கொள்ளும்
வலியர்தம் மருள்பெற் றோரை மற்றையோர்செய்வ தென்னே.(உகூ

பாங்குயர் தலத்தோர் திங்கட் பட்டினி விரதத் தின்பே
மூங்கொரு திங்கள் வாரத் தாற்றிய விரத நல்கும்
பாங்குயர் தலத்திற் பல்லாண் டருந்தவம் பயின்ற தின்பே
ருங்கொரு கடிகை மூலத் தாற்றியசெபத்தி னெய்தும். (௩0)

அத்தலத் துமையா ளாதி யனேகர்மெய்த் தவஞ்செய் தாரைந்
தத்தனு தியர்பல்லோ ரொம் மத்தனை யருச்சித் தாரொம்
மத்தனுந் தன்னைத் தானே யருச்சனை புரிந்தான் மேலு
மத்தநாட் டிறைமுன் னுகப் பலர்பழி யகற்றி னோர்கள். (௩க)

ஆயிரம் வாயி னாலு மனந்தனோர் பணிய தாகி
யாயிர முகஞ்சொன் னாலு மணியிடை மருதின் மேன்மை
யாயிர மதனி லோர்கூ றுயினு மறைதன் முற்று
தாயிரங் கதிரோ னன்ன வாய்மைசா லருந்த வத்தீர். (௩உ)

என்றனன் முனிவ ரைய வித்தல மகிமை தம்மு
ளொன்றுமித் திவசங் காறு முணர்ந்தில முணர்த லுற்றே
மின்றுன தருளி னுன்மற் றிசைதவ மிமைய மென்னுந்
தென்றனிப் பொருப்பின் செல்வி செய்ததென் னிமித்த மென்றார்.

என்றலு மகிழ்வுற் றந்த விருடியர் விருப்பந் தன்னைக்
குன்றெறி வடிவே லண்ணல் குறித்தநுங் கருத்தி தாயி
னன்றதூஉ முரைத்து மென்ன நவின்றன னவின்ற வாறே
துன்றுமக் கதைது மென்னச் சூதமா முனிவன் சொல்வான். (௩௪)

## தலவிசேடச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம் க௮௬.

சிவமயம்

# உபதேசச்சருக்கம்.

இரும ணிப்பெருங் கோடிபெற் றிலங்கலாற் சுவேத
வுரும னூற்றிடுந் தகையிரு ளுமையவ ளொடுதண்
மருமலர்ச்சடைத் தனிமுதன் மகிழ்ந்துறைந் திடலாற்
றருமமால்விடை போன்றது கைலையஞ் சயிலம். (௧)

செங்கண் மாலினை விடுத்தொரு சிறுவனுண் டிடமுன்
னங்க ளித்தல்போற் றனையின்னு மளித்திடா தெவர்க்குந்
துங்க வெற்புவிற் பரனறனைச் சுமந்துகொண் டினிது
பொங்கு பாற்கட லிருப்பது போலுமச் சயிலம். (௨)

அகில லோகமுங் கணத்திடை யழித்துட னாக்கு
மிகலுடைக் குறட் பூதங்க ளிலங்குபல் கோடி
பகரு மம்மலைச் சாரலெங் கணுமுயர் பரம
னுகள பங்கயப் பதம்புகழ்ந் தாடிடு மூலாவும். (௩)

அனைய சாரலின் மிசையெழி லாயிரந் தோட்டு
நனைகொ டாமரை யோசனையும நறவுமுண் டளிகள்
கனைசெ யப்பொலிந் தாயிரம யோசனை கமழும்
புனைமலர்ப்பொழிற் குலங்களும புடைதொறுஞ் சூழும். (௪)

ஓதி வற்றினுட் கதிர்மணி யொளிர்தரு மலகில்
வீதி யுமபுக லமரரோ டுருத்திரர் மேவுஞ்
சோதி மாளிகை நிரைகளுஞ் சூளிகைக் குழு
மாத வத்திறே ருறையுளும் வயின்றொறும் விளங்கும். (௫)

அலகின் மங்கைய ரிசைக்குமே ழிசையுட னுர்வத்
திலகு தும்புரு நாரத ரிசைக்குமியா ழிசையும்
நிலவு வானமு தெனச்செவி நெறிப்புகுந் துளத்தி
லுலவ மெய்மறந் துறைவரீ சனைத்தொழ வுற்றோர் (௬)

படக மாதியின் முழக்கமும் பணைமுலை மகளி
ரடிக டாங்கிடு மணிச்சிலம் போதையு மமர
ருட னருந்தவர் துதித்திடு மமலையு மொன்று
யிடியி னார்த்தலி னுணமுற் றிடியுட லிடியும் (௭)

இன்ன வீதிகள் சூழ்ந்திட நாப்பணுற் றிலங்கு
பொன்னின் மாமதி லேழினும் பொருந்துநாற் றிசையுந்
துன்னுகோபுரந் துணைகொள் பொன் மலையெனத் தோன்ற
மன்னு கோவிலொன் றம்மலை யுச்சியின் வயங்கும். (௮)

# உபதேசச்சருக்கம்.

கோயி லெங்கணு மமரர்தங் குலமணி மகுடம்
மேய வொன்றொடொன் றுரிஞ்சலின் வீழ்திடு மணியாற்
றூய மாமணி வரையெனச் சொலும்படி துலங்கும்
வாயி லெங்கணுங் கணாதிப ரளவிலர் வதிவார். (௯)

மணிய ழுத்திய தமனியத் தூண்பல வகுத்திட்
டிணையி லிந்திர நீலவொண் போதிகை யியற்றி
அணிசெ யுத்திர மரகதத் தமைத்துவண் கொடுங்கை
தணியி னீள்கதிர்ப் பதுமரா கத்தினாற் சமைத்து. (௰)

இந்து காந்தவுத் திரங்கண்மீ திலங்கிடப் பரப்பி
சந்த நித்தில விதானங்கள் சாற்றியுள் ளெங்குந்
தந்து மீதெழில் விமானமுந் தயங்கிடப் புரிந்த
வந்தண் மண்டப மொன்றுள தாலய நடுவில். (௰௧)

அடுக்கும் வச்சிரத் தமைத்தொளிர் விமானமீ தமரத்
தொடுக்கு மாணிக்கத் தசும்புறு சோதியின் முன்னர்
நடக்கு மோதின கரன்கதிர் நாணொடு தெற்கும்
வடக்கு மாகவே திரிகுவன் வயங்குமப் பகலோன். (௰௨)

ஓங்கு மண்டபத் திடையிலோ ருரகமா மணிக
டாங்கு வச்சிரத் தகட்டெழின் மடங்கலா தனத்தின்
வாங்கு வெண்பிறைச் செஞ்சடை வரதன்வீற் றிருந்து
பாங்கு பெற்றிடு மம்பிகைக் காகமம் பகரும். (௰௩)

மார் மிடற் றிறைவனைப் பணிவதற் கணைந்த
மால ய[illegible]முதல் வானவர் கணங்கள்
சால் பெரும்புகழ் சிலாதரன் றனயனுங் கீது
கால மன்றென மீண்டகன் கடைத்தலை யிருப்ப. (௰௪)

பானு கம்பனா தியர்சில பாரிடத் தலைவர்
மானமுற்றவர் சேய்மையி னிலங்குதூண் மறைவில்
ஞான நாயகன் பார்வையுஞ் சிறிதுமே னண்ண
தான மொன்றினிற் பொருந்திடா தனித்தனி நிற்ப. (௰௫)

அயில்கொள் வேல்விழிக் கமலினி யாதியாஞ் சிலர்கள்
பயிலுஞ் சேடிய ருமையவள் பங்கயா னனத்தி
லியலு மன்பொடு நோக்கம்வைத் தினிதுசே ணிடையோர்
வெயின் மணிச்சுவ ருகிற்சித் திரமென மேவ (௰௬)

கூறி டும்முல கனைத்தையு மீன்றவள் குலவு
வேறொ ராதனத் தருகெதிர் மேவினளிருந்து
மாறி லாதர முளத்திடை மருவிடக் கேட்குந்
தேறி டும்படி கேட்பவள் சிலவினைச் செய்வாள். (௰௭)

அத்தகை மதியு மடுத்ததன் னதனி லமரர்தங் குரவனு ளதுவு
மூய்த்திடு மவன்றன் வாரமுங் கலையா லுடுபதி நிறைந்திடு திதியு
மொத்தணைகின்ற தின்னதுத்தமமா மொளிர்விழாத்தொடங்குகவென்றான்
மெய்த்திற லரச னுவகைமீக் கூர்ந்து விருப்புட னவ்வணந்தொடங்கும்.

மருவளர் மலர்ப்பூம் பெழிலிடை மருதூர் மருதநா யகனெழிற் பூசத்
திருவிழாவினுக்குவந்திருந்திறையோன் றிருவருளடைந்துசெல்கென்னக்
கருநடந் தெலுங்க மாரிய மராடங் கவுடமா தியவுயர் நாட்டு
நிருபர்க டமக்கு மனமகிழ் வோடு நேர்தர வனைந்துமுன் விடுத்தான். ()

ஓங்கெழிற் கனக வரைக்குல மென்ன வுயர்மணித் தேர்கள்செய் வித்துத்
தேங்கமழ் மருத நிழலுறை யிறையோ னினகர மெங்கணும் விதானம்
பூங்கொடி மகர தோரணந் தொடலைப் புகழ்நடைக் காவண மாக்கி
தாங்குபொன் வீதி யலங்கரித் திடுவான் றழங்கொலி முரசறை வித்தான்.

வாரண மிசைநின் றறைந்திடு முரசின் வளரொலி கேட்டுள மகிழ்ந்து
தாரண வுறுபூங் கோதையர் மனையர் கவின்மனை தொறுமுனை வளைத்த
பூரண கும்ப மினியபொற் கொடிகள் பொலிவுறச் செய்துவீ திகளிற்
றோரண மலர்ப்பூம் பந்தர்கள்விரித்துச் சுடர்மணிப்படலைகணிரைத்தார்.

மணிவிளக் கெடுத்த தமனியப் பாவை வாயில்க டொறுமுற நிரைத்தார்
கணிதரு கமுகு தெங்கிளைஞ் சூலைகள் கதலிபைங் கன்னல்கள் விளைந்தா
ரணிபணியுரிஞ்சவுதிர்ந்தபொற்பொடிகளடங்கிடப்பனிப்புனலிறைத்தார்
திணிதரு தத்த மனைதொறும் வதுவை செய்தலிற் பிறவுமே லமைத்தார்.

துன்னிடு மோலை கண்டிடு செங்கோற் றுங்கவெண் குடைப்புர வலர்க
ளின்னிய முழக்குங் கடகரிச் சுறவு மிவுளிவண் டரங்கமு மெழிற்றே
ரொன்னுமொண் கலனும் பரந்திடு சேனை யிருங்கடல் சூழ்ந்திட வெழுந்து
மன்னிடு மகிழ்ச்சி யுடன்றிசை தோறும் வந்திடைமருதினிற் புகுந்தார். ()

வளவன்மற் றவரை யெதிர்கொடு மருத வனத்திறை மலர்ப்பதம் பணிவித்
துளமகிழ் சிறப்பும் வசதியு மவர்கட் குதவினு னுயர்விழா நடக்கும்
வளமையோர்ந் தவனித் தலத்துறை பிறரும் வானநா டிரகநாட் டினரு
மளவில்பே ருவகை தன்னுடனிடை மவரவ ரூர்திமேல் வந்தார். (சுகூ)

சென்னியுண் மகிழ்ந்து மாதவற் குறுகிச் செய்தவுஞ் செய்பவுமுரைத்து
முன்னகர் காவற் சாத்தன்மா காளி முதலியோர்க் கணிவிழா நடாத்தி
யென்னைய னென்னு மைங்கரக் கடவுட் கெழில்விழாத் தனியினி தியற்றி
மன்னனு ளிடபத் துவசமேற் றுவித்தான் மருதநா யகனுள மகிழ. (எ0)

அத்தின முதற்கொண் டேகநா யகனீ டணிதரு பொற்கலை மகுடம்
நித்தில வடங்கள் கதிர்மணிப் பதக்க நிலவுமிழ் மகரகுண் டலங்கள்
சித்திர மணிக்கங் கணங்கள்கே யூரந் திகழ்மணி நூபுர மாதி
மொய்த்திடு பணிபூண் டெழில்கொள்வா கனத்தின் முற்றிழை யுமையுட
னெழுந்து. (எக)

நாரணன் பிரமன் புரந்தர னாதி நவிலுமெண் டிசைபுரந் திடுவோர்
தாரணி வசுக்கள் வைரவ ரியக்கர் தண்மதிக் கடவுளா தித்தர்
போரணி நெடுவேற் றனவ ரிமையோர் போற்றுசுந் தருவர்விஞ் சையர்கள்
பாரிடத் தலைவர் சித்தர்மா தவர்கள் பார்த்திப ராதிமா னிடர்கள். (௭௨)

வம்பவிழ் கோதை யரம்பைய ருரக மடந்தையர் வயங்கெழு மாத
ரம்புவி யிடத்துப் பேதைய ராதி யணியிழை வனிதைய ரெவரும்
பைம்பொ னீள்வீதி யிடத்தினும் புயல்கண் படுசிகை மண்டப மீதுங்
கம்பயில் சிகரி மணிமதி லிடத்துங் கணங்கொடு நின்றுபோற்றிசைப்ப.

வேறு.

படகமொண் சங்கம் வீணை பகர்ந்திடு தகுணி பேரி
குடமுழா முரவ மொந்தை கொக்கரை தடாரி தாளந்
தடமுறு முருடு தக்கை சல்லரி குழல்யா ழாதி
திடனுறு கொண்ட லோடு திரைகடன் முழக்கஞ் செய்ய. (௭௪)

தருமமால் விடையோன் வந்தான் சம்பக வனேசன் வந்தான்
பெருநல முலையாண் மன்னும் பிறங்கெழி லிடத்தான் வந்தா
னிருணிற மிடற்றோன் வந்தா னேகநா யகன்வந் தானென்
றுருவளர் மணியிற் செய்த வுபயசின் னங்க ளார்ப்ப. (௭௫)

கவினுறு பாடற் பண்பு காந்தளொண் கரத்திற் காட்டி
சுவையுற வதனப் போதிற் றுணைவிழிக் கயலு லாவத்
தவறில்சீர்ச் சதியி னோரத் தளிரடி பெயர்த்து வைத்துக்
குவிமுலை மலர்ப்பூங் கோதை கொம்பனா நடனஞ் செய்ய. (௭௬)

எண்ணில்வெண் மதிகள் வெய்யோ னொதிருற்ற தென்ன வெண்ணில்
வண்ணவெண் டாளத் தொங்கல் வயங்குபொற் குடைகள் சூழத்
தண்ணுடுத் திரளுற் றென்னத் தரளவொண் பந்த ரோங்க
விண்ணிற்புள் ளினஞ்சூழ்ந் தென்ன வியன்கொடிக் குலங்க ணீட. (௭௭)

ஆவண மென்னும் வேலை யதிலெழு திரைக ளென்னக்
காவணக் கூந்த லார்கைக் கற்றைவெண் கவரி துள்ள
மாவணத் திலங்கவ் வேலை மலர்ந்திடு செம்பொற் கஞ்சப்
பூவண மெனத்தீ பங்கள் பொலிந்தவெண் ணிலாத வெங்கும். (௭௮)

காவிரித் தென்சா ரோங்குங் கவின்மணி மண்ட பத்தின்
மேவிவீற் றிருந்தன் னோர்க்கு வேண்டிய வரங்க ளீந்து
கோவிலுற் றினிதுநீடு கொடியுகந் திறக்கிச் சூழ்ந்த
தேவர்கண் முதலி னோர்க்குத் திகழுறு விடையு மீந்து. (௭௯)

மாற்றருஞ் சிறப்பின் மிக்க மடங்கலா தனத்து மீது
வீற்றிருந் தனன்மற் றிப்பால் வேந்தனுண் மகிழ்ந்து சென்று
போற்றினன் முனிவன் றன்னைப் புகழ்ந்தன னவனுக் காசி
சாற்றிவெண் ணீறு நெற்றி தரித்தன னுவகை கூர்ந்து. (௮௰)

சென்னிதன் னிருக்கை யெய்தித் தேவர்மன் னவர்க ளியார்க்குந்
துன்னுறு வரிசை நல்கித் தொகுமவர் தன்னை யேவி
மன்னர னருளி னாலோர் மகப்பயந் துவகை யெய்திப்
பின்வரும் வருடந் தோறும் பெருவிழா நடத்தல் செய்து. (௪௧)

பிறங்குபல் காலம் வாழ்ந்து பின்புதன் னரசு தன்னை
மறங்கிளர் நெடுவேற் செங்கை மைந்தனுக் குதவித் தான்சென்
றறங்கிளர் சிவலோ கத்தி லமர்ந்திடு புனிதன் செய்ய
நிறங்கிளர் பதார விந்த நிழலின்வீற் றிருந்தான் மன்னோ. (௪௨)

உரோ மசன் பின்னுமாங்கே வுயர்மரு திறையோன் பாத
சரோ ருகம் போற்றி நீடு தவம்புரிந் திருந்தா னிப்பால்
விரோதமில் லருந்த வத்து மிருகண்டு வென்னு மேலோன்
வரோதய னென்ன வோது மார்க்கண்டன் பேறு சொல்வாம். (௪௩)

உரோமசச் சருக்கம் முற்றும்.

ஆ திருவிருத்தம் ௪௬௨.



௨

# மார்க்கண்டச் சருக்கம்.

மாத வப்பெரு வாழ்வுறு மார்க்கண்ட முனிவன்
வேத நாதமுந் திரைகடன் முழக்கமும் விரவுங்
கோதில்சீர்க் கடலூ ருறை யிறையவன் குளிர்பொற்
பாத பங்கயங் கூற்றின்மேற் படப்புரிந்த தற்பின். (௧)

வேலை சூழ்புவி யிடைப்பல தவங்களின் மேவி
பால லோசன னுமைக்கொரு பாசமுன் னளித்த
கோல மின்புறக் காணிய வுளத்திடைக் குறித்துச்
சீல மாதவம் பலபகல் செய்துசெய் திளைத்தான். (௨)

ஒருத லத்துமத் திறனெதி ருற்றிடக் காணான்
கருது வண்புக ழிடைமரு திடத்தினிற் கலந்து
பொருத ரங்கமொண் மணியெறி பொன்னிநீர் படிந்து
மருத நாயக னடிமலர் வணங்கிநின் றேத்தி. (௩)

பரிவி னோடொரு சிறையிருந் தெதிர்வரு பன்னா
ளரிய மாதவ மியற்றின னவனும்வந் தன்பர்க்
குரிய நாயக னுமையுடன் கருணையுற் றும்பர்
விரிகொ ளொண்மலர் சொரிதர மேவிமுன் னின்றான். (௪)

வேறு.

ஒருவடி வதனி லொருபுறத் தரன்மற் றொருபுற முயமொழி யுமையாள்
மருவுதன் புறநீற் றணியுறு தவள மலர்ச்சடை நீலவொண் மிடறு
பரவெழின் மார்பிற் பணியணி பூணூல் பகர்புலித் தோலுடைப் பரசு
விரவுறு தடக்கைச்சிலம்புறுமலாத்தாள் வீரவொண்மணிவட மதின்மேல்.

நவிலுறு முமைதன் வடிவெழிற் பசுமை நாண்மலர் நிறைதருங் கூந்தல்
கவினுறு முயர்குங் குமமொளிர் மிடறு கச்சொடு கதிர்மணிக் கவின்சூழ்
குவிமுலைவளர்மார்பிலங்கெழிற்பட்டுக் குலவுநுண்ணிடைமணித்தொடிக்
கை, திவளொளி மணிப்பொற் பாடகஞ் சதங்கை திகழ்ந்திடு சீறடிப்
போது. (௬)

என்னவோ திடுமின் னிவைவல னிடமா யிலங்கிடக் கணாதிபர் சூழ
முன்னர்நின்றிடலுங் கண்டெழுந்து முளரிநாண்மலர்ப்பதமிறைஞ்சி
மன்னுள முருகிப் பரவச மடைய மலர்க்கணீர் சொரிதரக் கரங்கள்
சென்னிமேற் குவித்து நின்றனன் பின்னர் தெளிவுபெற் றிங்ஙனந் துதிக்
கும். (௭)

நீலமார் மிடற்றாய் பவளமால் வடிவி னீறணி நிருத்தனே போற்றி
வேலினைநிகர்க்கும்விழியுமையொருபால் விளங்கவந்தெளியனேன்காண
பாலுமின்சுவையும்வேறுவேறிருக்கும் பரிசெனநின்றனைபோற்றி
யேலுமெய்யன்பர்க்கெளியனேபொழில்சூழிடைமருதிறைவனேபோற்றி.

அன்றுநானுன்பாலடைக்கலம்புகுதவடற்படைகொண்டெனைப்பிடிப்பா
கன்றிவந்திடுவெங்காலனைக்கறுவுகொண்டுதைத்துயிர்தனைக்குடித்தா [ன்
யின்றுமென்கருத்துமுடிந்திடவுமையாளிலங்கொருபுறத்துடனின்றா
யென்றுமென்றனைக்காத்தருள்வதுன்னியல்பேயிடைமருதுறைபராஞ்சுடரே

எனத்துதித் திடலு மெதிருறு மிறைவ னியம்புவான் முனிவர் டலைவ
வினைத்துய ரகற்று மனதருந் தவமு மிகுந்தநின் பத்தியுந் துதியும்
கனக்கநா முளத்தின் மகிழ்ச்சிசெய் தனநீ கருதிய வரங்கள்கே ளென்றான்
சினக்களை களைந்து தவப்பயிர் வளர்க்குந் திறவினா னின்னவை பகரும்.

நிலவுறு மிமையோர் தலைவரு முனா நின்னரு டன்னொடு நீயு
மிலகிடவெளிநின்றென்னையாண்டனைமற் றினிவரமிதனில்வேறென்னே
குலவுறு மினைய தலத்தில்வந் துன்றன் குரைகழற் பதமலர் பணிவோர்
கலகிலெவ் வரமு மளித்தருள் புரிந்தீண் டவர்களை யாண்டிட வேண்டும்.

கொடியதிக் கயங்கணிலைபிறழ்ந் திடினுங் குளிர்கட லந்தரத் துறினு
மடியனே னின்பாற் சிறிதுவைத் திருக்கு மன்பினிற் குறைவுறா தருளிக்
கடிகமழ் கடுக்கைத் தொடைபுனை வேணிக் கண்ணுதற் பராபரவெனக்கு
முடிவினி லுன்றன் மறைச்சிலம் பரற்று முண்டகப் பதந்துணைதருவாய்.

நின்பணி விடைகள் புரிந்துளோ ரடிசில் நிதியொடு கலைமுத லியநின்
னன்பர்கட் கினைய தலத்திடை யளித்தோ ரழிவிலா நிலைப்பத மருவி
யின்பமுற் றிடவும் புரிதியென் றிசைத்தா னிசைத்திடு வரமெலா முதவி
மின்பயில் வேணி வரதனந் நிலையே விமலைதன் னொடுமகிழ்ந் திருந்தான்.

வீற்றிருந் தருளும் பிறைமதிச் சடில விமலனைப் பெருநல முலையைப்
யோற்றிவந் தனஞ்செய் தனுதின மினிது பூசனை புரிந்துபல் கால
மாற்றருங் காதல் கொண்டுமார்க் கண்ட மாதவன் பின்னுமாங் கிருந்தான்
மேற்றனிச் செங்கோற் சுகீர்த்திமன் னவன்றன் வியனுறு சரிதைகூ றிடு
வாம். (௰௪)

**மார்க்கண்டச் சருக்கம் முற்றும்.**

ஆ திருவிருத்தம் ௬௭௬.

தந்தியின் குழாமும் பாய்மாத் தானையு மருங்கு போத
மைந்தர்கண் முன்பு செல்ல வண்புகழ்த் தண்டி பின்னர்
வந்திட மறுகி னூடு மருவுபோ திரண்டும் வானோர்
சுந்தர மலரின் மாரி சொரிந்திடப் பவனி யுற்று. (எ௰க)

மின்னுபொன் வரையினோங்கு வெயின்மணித் தேரி னேறிப்
பன்னிடு புனர்த நாளிற் படரொழிற் பவனி வந்தா
மன்னிடு பூச நாளின் மால்விடை யேறி நீடு
பொன்னியுற் றினிய தீர்த்தம் பொருந்திய வெவர்க்கு மீந்து. (அ௰)

## சுகீர்த்திமன் சருக்கம்.

மந்தமா ருதஞ் சூழ்பொழி லிடத்துறு மலர்கள்
சிந்து தேறலின் சிறுதுளிக் குலங்கொடு சீத்றி
நந்தவில் லெழின் மாடவீ திகளெலா நறுந்தேன்
கந்த மோங்கிடு முயர்மதிற் கச்சியி லுறைவோன். (க)

வன்ற னிப்புலிக் கொடியினான் மன்னவர் திலகன்
றுன்று தெண்டிரைக் கடல்புரை சேனையன் சுகீர்த்தி
யென்று ரைத்திடு பெயரினா னிரவலர்க் கென்ன
மன்ற தன்பொரு ளியாவையு மதித்துத வியிடுவோன். (உ)

காம னேயெனு மெழிலினான் கலையெலா முணர்ந்தோ
னுமை வேற்கையான் மகளிர்தந் நயனவண் டினமுந்
தாம மார்தரு வரிசனுந் தயங்கிடு புயத்தோன்
மாம திக்குடை நிழலினில் வையகம் புரப்போன். (௩)

அல்லி னேருறு கண்டனு மவனடி யவருஞ்
சொல்லு மன்னதன் பொருளுமென் றிறைஞ்சிடு தூயோன்
வல்ல வஞ்சகப் பகைவர்தங் களுக்கொரு மறவோ
னல்ல வர்க்கவர் புதல்வரி னொழுகுறு நண்பன். (௪)

புன்க ணுற்றிடி னெளியவர் புவியிடைப் பொருந்து
தன்க ணிற்கொடு நோயுறு மவனெனத் தளரும்
வன்க ணாளரைத் தண்டனை மருவுவித் தவர்மே
னன்க ணுறிட வியற்றுவோ னல்லறம் வளர்ப்போன். (௫)

இந்த நீர்மையி னின்பமுற் றிருந்திடு நாளின்
மைந்த னின்மையாற் சிறியதோர் மனக்குறை யெய்தி
யந்த ணாளர்தம் பூசனை விரதங்க ளாற்றி
முந்து தீர்த்தங்கள் படிந்துசாந் திகள்பல முயன்றான். (௬)

இனைய வாற்றியு மகவுதித் திடாமைகண் டிரங்கி
யனைய நீடவை மருவிடு மவனுயிர் போல்வார்
புனையு முத்தமிழ் முனிவரன் பொன்னடி வணங்கிற்
றனைய னீவனின் றேல்வழி சாற்றுவ னென்றார். (எ)

சந்த வெண்குடைச் சுகீர்த்தியுந் தருவதா மிஃதென்
றந்த மாதவ னெங்குளா னெனவினி தாய்ந்து
கந்த நெய்தலொண் மகளிர்கண் காட்டுவெண் காட்டில்
வந்தம் மாதவ முனிவரன் மலர்ப்பதம் பணிந்தான். (அ)

மிக்க தென்வரைச் சிகாமணி யாகிய மேலோன்
றக்க வாசிக ளொடுபல முகமனுஞ் சாற்றி
மக்கண் மற்றுளார் நிகழ்ச்சியும் வினவலும் வளவன்
விக்கி னொன நின்றனன் விழுமமீ தூர. (கூ)

என்ன கத்திடைத் துயருனக் கென்றனன் முனிவன்
மன்ன நீ சொனக் களவிலா வளங்கண்மற் றளித்தி
ரன்ன வற்றினிற் பெருமகிழ் வெய்தின னவற்றோ
ரின்ன லுற்றனன் புதல்வர்க ளிந்திடா மையினால். (ய)

அலகில் புண்ணிய தீர்த்தங்க ளாடினே னுடி
யலகி லந்தணர்க் கிசைவுறு தானமு மளித்தே
னலகி னேன்புக ளாற்றினேன் றவம்பல விழைத்தே
னலகில் சாந்திகள் செய்தன னுங்கும தருளால். (யக)

சிந்தி டப்பெரு தனைகையோன் செல்வமு மதவே
ளந்த மும்விதி மகிமையு மனந்தநீ டறிவு
மிந்தி ரன்பெறு போகமு மெய்திவாழ்ந் திடினு
மைந்த ரின்றெனின் மற்றதோர் வாழ்வெனப் படுமோ. (யஉ)

கருணை யுற்றினி யேனுமோர் காதல னுதவி
யிருமை தன்னினு மெளியனே னின்பமுற் றிடநீர்
புரிய வேண்டுமென் றுரைத்தனன் பொதியவெற் புறைவோன்
வெருவ லோவுமை யிடத்திறை னருண்மென விளம்பும். (யங)

செங்கெ லோங்கெழிற் கன்னலிற் செறிந்திடு மருதந்
துன்னு வேலியிற் சூழ்கமு கிலங்கிடை மருத
மன்னு செஞ்சடைச் சோதிபால் வயங்குமோர் மருத
மன்ன திற்படிந் திசைத்திடு மளிக்குல மருதம். (யச)

கருமை யுற்றிடுஞ் சிறைவரிக் கணமிசைக் குறிஞ்சி
பரவு வானிடைச் செலவுறு பருவரைக் குறிஞ்சி
மருவு தேன்சொலார் கூந்தலே மானநன் குறிஞ்சி
யுரவு தண்கடன் முகிற்குல முலவுமாங் குறிஞ்சி. (யரு)

சொற்றி டாயிடைத் தூயபொன் னிழையினு னெய்த
லுற்ற மென்கலை மாதரா ரொளிகொள்கண் ணெய்தல்
பற்று மாடவர் நங்கண்மேற் பார்வையி னெய்தல்
கற்ற தாமுல குயிர்கண்மேற் கணமத னெய்தல். (மக)

நலங்கொ ளிந்திரன் கலைமக ளுயகன் முல்லை
நிலங்கொண் மாதவன் போற்றுமக் கெடும்பதி முல்லை
வலங்கொள் வேற்றடங் கட்பிறை வாணுதன் முல்லை
யிலங்கு மூரலா ரிடைக்குடி யிருந்திடு முல்லை. (மஎ)

ஏகி யங்குநீ விரைவினி லிசைத்திடும் பாலை
மேக மென்மொழிக் கூந்தலாள் விளங்கொரு பாலை
பாக முற்றிடு பரமனைப் பணிந்திடப் பாலை
யாகி லுன்மனத் துயரொலா மடைந்திடும் பாலை. (மஅ)

முன்ப னிக்கதிர் குடிதன் பூசனை முடித்துத்
தென்பு லத்தவர் பூசையாஞ் சிராத்தமு மியற்றி
யின்ப மைந்தனுற் றிடுமென்று னிறைவனை யெவையு
மன்பி னீவனே பிதிர்க்களென் னென்றன னரசன். (மக)

வேறு.

பகரொருகா ரணத்தாற்றுன் மரணமெய்திப்
பசாசபந்த திருந்திடுவோர் நரகினுற்றோ
ரிகலுறுவெம் பசியதனி லுணவிலாம
லிடருறுங்காற் புவியிடைத்தம் வருக்கத் தோர்க்கு
மகவிலையா குகவென்னச் சபித்தல் செய்வார்
மற்றவர்தங் களுக்கிறைவர் பிதிர்க்க ளாகும்
புகழவரைப் பூசித்தா லன்றோர் தம்மைப்
பொருபசிதீர்த் திவர்களுக்கும் புதல்வ ரீவர். (உ௰)

இந்தவகை யதிகார மிவர்கட் கீச
னீந்ததுவே யிவர்பிரேத பிதுர்க்க ளாகும்.
முந்தறஞ்செய் திறந்தசுர ராயி னோர்க்கு
முதல்வர்சில ரவர்தேவ பிதிர்க்க ளாகும்
வந்தமுறை யிவ்விருவ ரிடத்திற் பூசை
வளரிரவி பூசையொடு மதியின் பூசை
சந்திரனம் பிகையிரவி யீச னுகுஞ்
சாற்றிதனுற் பிதிர்பூசை புறம்பன் றாமால். (உக)

பரன்பூசை கொள்ளுமிட மநேக மாகும்
பகரவற்றுட் பிதிர்க்களுமோர் தான மாகும்
விரவுமவர் மகவருளிச் செய்த றானும்
விதுபுனைவோ னருளேயா முறையீ தாகு

மருவுமிந்த வகைப்பூசை புறஞ்செய் தற்கு
மருதவனந் தனிவியற்ற லதிக மாகுங்
கருதுபலன் விளைவிலுறு மிதற்கோர் காதை
காவலகே ளெனமுனிவ னியம்பு மன்றே. (உஉ)

நத்துலவும் வயன்மருத வனத்தின் மேவு
நம்பனடி தொழப்பருவங் கோறுஞ் செல்வே
னித்தனுமாங் கென்வரவு நோக்கி முன்னர்
நிறையருளி னொடுநிறகுஞ் செல்போதெல்லா
மித்தகையிற் செல்காலத் தொருநாண் மார்க்கத்
திலங்குபகற் போதிலிரு விசும்பு தன்னி
லத்தவென வய்யவென வையோ வென்ன
வபயமெனக் கதறுமொலி யெழுந்த தம்ம. (உ௩)

அவைசெவியிற் புகலுமென்னே வுலக மெல்லா
மல்லலுறு மின்றவென விரக்க மெய்திச்
சிவசிவவென் றனனின்றோர் கணத்தி லென்முன்
சிவந்தநிறச் சூறைமயிர்க் குழிகட் பேழ்வாய்
நவிலுநெடுங் கழுத்தினரா யலகை யென்ன
நண்ணினர்க ளநேகருட லிரத்தம் பாயக்
கவலையுறு நெஞ்சினொடு பாசந் தன்னாற
கட்டுண்டு வெட்டுண்டு கண்ணீர் சோர. (உ௪)

ஓதுமவ ரெனைத்துதித்தா ரநேக மாக
வுற்றவரை நோக்கியா னீவிர் யாவர்
யாதுபவ மிழைத்தீர்க ளென்றே னன்னோர்
யாங்கள் பிற னில்விழைத லெளியோர்க் கின்னல்
வேதநிந்தை தெய்வநிந்தை மிக்கோர் நிந்தை
விளம்பிடுமே லவர்பசிக்க வுண்டல் பஞ்ச
பாதகங்க ளழிவழக்கு முதல வாயப்
பாவங்க ளெண்ணிறந்த வியற்றி னோர்கள் (உ௫)

எங்களைவந் துறப்பிடித்திவ் வுருவ நல்கி
யெரிக்கண்ண ரிதழ்கடிக்கு மெயிற்றி னோர்கள்
பொங்குகடுஞ் சினத்தரிடிக் குரலர் பாறுட்
பொருந்துமிருள் வடிவினர்க ளியம னேவு
கிங்கரர்க ளெண்ணிறந்தோர் பாசத் தார்த்துக்
கிளைத்திடுமு விலைச்சூலம் வேல்வா ளாதி
யங்கைநெடும் படைகளினாற் குத்தி வெட்டி
யடித்தலற வலறவிழுத் தேகி னோர்கள். (உ௬)

எகிநமன் முன்விடுத்தா ரவன்மற் றங்ங
னெங்கள்சிரந் தனிற்கால தண்ட மேற்றிப்
பாகுறநின் றியாங்களுரைத் தனவு நீடு
பரிவுறுதன் கணக்கரிசைத் தனவுங் கேட்டு
வேகமுறு நரகினிடை யிவர்க ளம்மை
விடுத்துமுறைப் படிதண்ட மியற்று கென்று
ளுகவெழுந் தனர்பின்னு மநேக ரங்கே
யாலமென வளைந்தனர்கள் கொண்டு சென்றார். (உ௭)

வேறு.

மன்னு துச்சக நரகிடை மருவுற விடுத்திட்
டன்ன திற்பிறன் மனைவியை யணைத்தவெம் பவத்தாற்
பன்னு செந்தழற் காய்ந்தசெப் பெழிலுறு பாவை
தன்னை மெய்யுறத் தழீஇக்கொடு தளர்ந்திடச் செய்தார். (உ௮)

விரும்ப லுற்றய லாடனைப் பார்த்ததான் மேவு
பெரும்ப வத்தினாற் புகலந்தத் தமத்திடைப் பிறங்கு
மிரும்பி னுக்கிய துண்டவெங் காக்கைக ளிகலுற்
றொருங்கு கண்களைக் கொத்தியீர்த் துலைத்திட விடுத்தார். (உ௯)

விண்டி டிந்துவு மிரவியு மேவுநாள் பிறர்வீட்
டுண்ட பாதகத் தோங்குதுற் கடத்திடை யுற்று
மண்டு காக்கைக ளழலிடை வைத்தகூ ரிருப்புத்
துண்டமிட்டுநா வினைத்துணித் திடவெதிர் தொடுத்தார். (௩0)

தந்தை தாயர்கண் மூத்தவர் சாற்றிடு மொழியை
மூந்து கேளுரு மதத்தினன் மூண்டவல் வினையின்
வெந்த ழற்கொடுஞ் செக்கிலிட் டரைத்திட மெலிந்து
சிந்தை நொந்தறி வழிந்திடச் செய்தனர் பலநாள். (௩௧)

தனையர் தந்தைதாய் முதிர்ந்தவரோர் சார்ந்திடு கிளைஞ
ரினையர் வெம்பசி யறிந்திருந் தினிதுறப் புசித்த
வினையி னாற்புகல் செம்பினை யுருக்கிவாய் விடுத்துப்
புனைகொள் பாசத்தி னடித்தனர் பொருந்துறப் பலநாள். (௩௨)

பெரியர் தங்களை நிந்தனை பேசிய வாய்ப்பற்
சரிய நீள்கவு ளடியுமென் றடித்தனர் சரித்தார்
தெரியு றும்பிறர் பொருள்களைக் கவர்ந்திடு திண்கை
யரியு மென்றரிந் திட்டன ரபயமிட் டலற. (௩௩)

உன்னு மீசர்தம் மடியவ ரொளியவர்க் குதவா
தின்னல் செய்திடு தனுக்களா மிவைகளைப் பிடுங்கித்
தின்னு மென்றுநாய் நரிபுலி கழுகொடு தீய
பன்ன கங்களை விடுத்தனர் பதைபதைத் திரங்க. (௩௪)

கால சூத்திரங் கண்டகோ லாகலங் கரானை
மால்செய் கூடசான் மலியொடு வளர்கும்பி பாகங்
கோலிடுங் தழற் பிரானரோ தம்படர் கோர
மோலி டின்னவை யாதிய நரகெலா முழன்ருேம். (கூரு)

இலகு மொவ்வொரு நாள்களி னெம்மொடு மியற்றும்
வலிய தண்டனை தன்ெறடு மனமுறு வேகத்
துலக மியாவையுங் கணத்திடை யுலாவியங் குறுவார்
சுலவி யேகுதற் கின்றுமத் திறமிவண் சூழ்ந்தார். (கூசு)

வேறு.

இன்னமுமென் செய்வர்களோ வறிந்தி லேமே
லிவ்வுழிநீர் சிவசிவவென் றுரைத்த சத்த
மன்னவர்கா தினிற்புகலு மும்மை நோக்கி
யகன்றனர்க ளெமைவிடுத்து நாங்க ளிங்குத்
துன்னினமுற் றுமதருளா லினிமற் றன்னோர்
தொடர்ந்தெம்மை வருத்தாமற் போற்று கென்னப்
பன்னினனி யானவர்களை யஞ்சேன்மி னென்று
பரவு மவருடனு மிடைமருதி னெய்தி. (கூஎ)

முக்கணுறு பரஞ்சுடரை வணங்கச் செய்து
முதியபுகழ்ப் பொன்னியிடை மூழ்கு வித்துத்
தொக்கவர் கோத்திர முரைத்துப் பிதிர்களுக்குத்
தூயதில தர்ப்பணமுஞ் செய்வித் தேன்மே
லக்கணத்தி னலகை யுருவாகி னோர்க
ளமரர்களா யெழின்மருவி விமான மேறி
மிக்கசுர துந்துபிகண் முழங்க வானோர்
வியன்மலர் மாரிகள் சொரியத் துறக்கம்புக்கார். (கூஅ)

அனையதல மான்மியமும் பிதிர்பூசை தன்றா
லாகியது முணர்ந்தனையே யனேக ரின்னு
மினையவகை யத்தலத்திற் கதியுற் றோர்க
ளிலங்கிலைவேற் சுகீர்த்தி மன்னநீயு மெய்திக்
கனைகடனஞ் சருந்திறையோன் பதம் பணிந்து
கட்டுரைத்த படியியற்றி யுலகம்போற்றுந்
தனையனு திக்திடு மதன்பினிறையோன் கோயிற்
றயங்குதிருப் பணியாதி செய்தி யென்றான். (கூகூ)

வேறு.

மன்னவன் குறுமுனிவனை வணங்கினன் விடைகொண்
டன்னம் வாழ்மலர்ப் பொழில்குலா மணியிடை மருது
தன்னை யெய்தினன் பொன்னியிற் படிந்தனன் சடைமேற்
பன்னிளம் பிறைசூடி தன்பதயுகம் பணிந்தான். (சு0)

மதித்திடும் புகழாதிநூல் வகுத்திடு முறையே
பிதிர்க்கள் பூசையும் புரிந்தனன் பிறங்குவே ளென்ன
வுதித்தனன் றனிப்புதல்வன் றன்னுளத்திடை மகிழ்ச்சி
கதித்தனன் சொரிந்தான் முகிலென வொளிர் கனகம். (௬௧)

காற்றுமென் சருகறல் பொசித்தெண்ணறுங் காலஞ்
சாற்றுமைங் கனலிடைக் கடந்தனிற் றலைகீழா
ேதாற்றிடுந் தவப்பேறொரு நொடியினிற் பெரியோர்
மாற்றமொன்றினி லெளிதினிற் கிடைத்திடு மன்றோ. (௬௨)

என்ப துண்மையே யென மகிழ்ந்திறைவ னுலயத்துட்
பொன் பிறங்கிடு திருப்பணி யலகில பொலிவித்
தன்பி னோங்கிடு பூசனை யணிவிழா நடத்தி
மன்பெரும் பதிநிதிக்குவை வழங்கினன் மிகவும். (௬௩)

ஓதுவேதியர் தமக்கு நன்னிலம் பலவுதவி
மீதிலங்கு பல்கால நீள் விருப்பொடு வாழ்ந்து
காதன் மைந்தனிப் பூதலங்காத்திடப் பின்னர்ச்
சோதிதன் மலர்ச்சரோருகத் துணைப்பத மடைந்தான். (௬௪)

எண்ணரும் புகழ்ச்சுகீர்த்தி மனிடை மருவெய்தி
யண்ணலைப்பணிந் தெண்ணியசடைந்தவா றிசைத்தேம்
புண்ணியத்தனிக் காசிபனருந் தவம் புரிந்து
கண்ணனெய்திடப் பணிந்திடு காதைமே லிசைப்பாம். (௬௫)

சுகீர்த்திமன்சருக்கம் முற்றும்.

ஆ திருவிருத்தம்-௫௨௩.



௨

# காசிபச் சருக்கம்.



எழிலுறு பிரமர் பதின்மரி லொருவனெனப் புகழ்காசிப முனிவ
னழலுமிழ் திகிரிப் பொருபடை முகுந்தனுயர்தஞ் சேரியிற் சிறிய
குழவியின் வடிவத் துடன் விளையாடுங்கோதில்சீர்க் கோலமுன் னோக்கித்
தொழுதிடவேண்டுமெனவொருகருத்துதொடர்ந்திடப்பற்பகல்கழித்து. ()

கனத்திடு தவஞ்செய் தன்றியவ்வுருவங் காண்பரிதாகு மத்தவமு
மினத்தடம்பொழில்சூழிடைமருதிடத்தினியற்றிடினெல்லையிற்றென்று
மெனக்குறித்தனைய தலத்தினுற்றொருசிற்றிடைப் பெருநலமுலையென்னு
மனத்துடன்மருதநிழலுறைபிறையோனடி மலர்ப்போற்றினன் பணிந்து.

பெருமகிழ் வெய்தி யரனருட்செல்வம் பெற்றகன் றொருசிறை குறித்துக்
கருதியதியற்றத் திரைமணி கொழிக்குங் காவிரித்தண் புனலாடி
யுரிமையினியதி முடிப்பனமுடித்தாங் குறைந்துண வொடுதுயிலகற்றி
யிரவுநன்பகலுங்கண்ணனைமனத்தி லிருத்திநோற்றிட்டனன்சின்னாள். ()

வண்ணநூபுரம் பட்டிகை யொளிர்தரள மாலிகை மகர குண்டலமேற்
றண்மணிச்சுடிகை சுடர்த்தொடி முதலாய்த் தரித்தொரு குழவியினுருவா
யொண்மதி வதன மிளநில வெறிப்ப வுரலிடை யசைத்தவ னாகக்
கண்ணனம் முனிவன் கருதியபடியே கண்ணுறத் தோன்றினன்மன்னோ.

கண்டனன் முனிவன் பணிந்தன னெழுந்தான் கருத்தினி லடங்கிடாமகிழ்ச்சி, கொண்டனனெளியேன் றனையொரு பொருளாக் கொண்டெழுந்தருளினை யென்னைப், பண்டருசுருதி கொடுபலத்துதித்தான் பங்கயக்கண்ணனுன் றவத்தால், விண்டிடுது தியானக மிகமகிழ்ந்தேம் வேண்டியவரங்கள் கேளென்றான். (ரு)

நந்தநந் தனதா மோதர முகுந்த நவிலுமிப் பதியுணீ யுறைந்து
வந்துனைக்கண்டு பணிந்துளோர் துதித்தோர் மனத்திடைக் குறித்தவ ரெவர்க்குஞ், சிந்தையிலவர்க ணினைத்திடு வரங்கள் சிறந்திடமகிழ்ந்திடவுடனே, தந்திட வேண்டுமென்றனன் முனிவன் சதுமுகன் றுறையீ துரைப்பான். (சு)

மெய்த்தவமுனிவ நாமுமீண்டுறைது மேலுளவரங்களு மளித்தே
மித்தலம் போல்வதிசைத்திடு முலகத்தில்லையீ துண்மையாமறிவோம்
நித்தனுண் மகிழ்வுற்றிருக்கு மீண்டவனை நினைக்குமுன்னினைத் தனவுறுமீ
துய்த்துணர்வோர்க்குப் புகலுதிநீயு முற்றருச்சனை புரிகென்றான். (எ)

முனிவர னிவ்வா றருளிவீற்றிருக்கு முகுந்தனைப் பணிந்தருச்சனைசெய்
தனையவனுரைத்த தன்பினோ டெவர்க்கு மறைந்தெழின் மருதநாயகனைக்
கனிவுறு மன்பினுலகெலா மிறைஞ்சிக் கதியுறத்தானு மர்ச்சனைசெய்
தினிதுறுவரம் பெற்றிருந்தனன் பன்னுளிசைக்குமத்தலத்தின்மாதவத்தீர்.

நீவிருமனைய விடைமருதடைந்து நிகழ்த்திடு மகப்பயிரியற்றின்
மேவுறு பலன்மற் றெல்லையின் மிகவும் விளையுமின் பெய்தலாமென்னச்
சேவலங்கொடியோன் முனிவர்களெவருந்தெளிவுறவுரைத்தனன்முனிவர்
யாவருமகிழ்ந் தித்தலத்தினுக்கிணை வேறெங்கு மின்றெனப்பணிந் திசைத்தார். (கூ)

மையறு குணத்துச் செழுதவ முனிவீர் மற்றினிச் சூருரம் பிளந்த
செய்யவேற்றடக்கைச் சரவணபவனுந் திகழ்வசிட்டாதி மாதவருஞ்
சையமால் வரையினின் றிடைமருதிற் சார்ந்து செஞ்சடையிலிந்துடனே
பையராப்புனைந்த மருதநாயகனைப் பணிந்தருச் சித்தவாறிசைப்பாம். (க0)

காசிபசச்சருக்கம் முற்றும்.

ஆக திருவிருத்தம்-ருஙங.





உ

# குமாரபூசைச் சருக்கம்.

மாக நாடவர் போற்றிடை மருதடைந்து வளந்தரு மகம்புரி வதனுக்
கேகமாதவத்தோர்தன்விடைமேற்கொண்டெழுதலு மிலங்குவேற் குகனுந்
தோகை மேற்கொண் டாங்கெழுந்து விண்ணெறியாய்த் தொடரு மாதவ
ர்களுஞ்சூழ, நாக மென்பணி வோனுறை பதியிடையி னண்ணினர் பணிந்
தகன்றேகி. (க)

தனதெனப் புலவர் துதிபரங் குன்று தாவிலாவினன் குடிசெந்தூ
ரினமுகில் வதியும் பழமுதிர் சோலை யேரகப்பதி முதலான
கனமுறு தலங்க ளியாவையு மணைந்து காட்டமுன் பணிந்தினி தேத்தி
மனமகிழ் முனிவோர்க் கிடைமரு தெதிரோ வயங்கிடல் காண்மினென் றி
சைத்தான். (உ)

கண்டனர் சேணினேமிமால் வரை போற்கதித் தெழுபுரிசையி னழகுங்
கொண்டலூர் பொழிலு மாடநீ ணிலையுங் கோபுரத் தெழிலு மாலயமு
மண்டு பேருவகை வாரியிற் படிந்தார் வணங்கினர் பரவச மடைந்தார்
விண்டனர் துதிகள் கண்டனரவை விடாது கொண்டிடை மருதணைந்தான்.

சங்குலா மருதஞ் சூழிடை மருதிற் சார்ந்திறை பதாம் புயம்பணிந்து
கங்கையைக் குறித்தான் குறித்திடுமுன்னர்க் கதழ்வினி லெய்தினளவளைத்
திங்கள்சூ டிறையோற்காட்டுதற்பொருட்டுந் நினைப்பவர் பவந்தவிர்பொரு
ட்டு, மிங்குறைந் திடுக வென்றனனவளுமீ சனுக்கீசதிக் கமர்ந்தாள்.

அறைதரு மினிய புனிதநீ ரொடுத்தாங் காரபிடேகமு மியற்றி
நறைவிரித்திடுபோ தாதியாலமலணலந்தரு சிவாகம விதியான்
முறையுயர் பூசைபுரிந்துளமகிழ்ந்தான் முனிவர்களிலங்கெழிற் பொன்னித்
துறையினுங் கங்கைப் புனலினு மற்றைத் தூயதீர்த்தத்தினுமாடி. (௫)

கற்பனை கடந்த கருணைவாரிதியைக் கண்ணுதற்பொருப்பினைப்பொருப்பு
விற்பிடித் திடுநாட் பங்கயச் செங்கை விமலனை மருத நாயகனை
யற்புதத் தொடிக்கைப் பெரு நலமுலையை யைங்கரக் கடவுளைப்பணிந்து
சொற்படு மலரா லருச்சனை புரிந்து துதித்தன ரளவிலாத் துதிகள். (௬)

வெயில்விரி மணிப்பொற் சிங்கவா சனத்தின் மீது வீற்றிருந் திடுமொங்க
ளயிலுறு தடக்கைக் குமரநாயகன் றனடிமலர் பணிந் தருச்சித்தார்
பயிலுமஞ் செழுத்தைச் செபித்தனர் விதியிற் பரிவொடு மற்றதன் பின்
ேனார், வயினுமற் றெவரும் வேண்டுவ கொண்டு மகமினி தியற்றினா
மன்னோ. (௭)

பன்னகம் புனைவோ னெல்லையிலிமயப்பாவையி னுடனடல் விடைமேல்
முன்னர் நின்றனன் கண்டிறைஞ்சினர் நீவிர்முன் வரங்கேண்மி னென்றி
சைத்தான், நின்னடித் துணையை மறந்திடா தென்றும் நியதியாயருச்சனை
செயவு, முன்னியபெறவு மருள்கெனப் பணிந்தார் முன்னவ னீந்தனன்
கரந்தான். (௮)

இவ்வரமேற்று மகிழ்ந்து மாதவர் களியாவரு முமையொரு புறத்து
நவ்வியங்கரத்தோன் பதசரோருகத்தினொடொறு மருச்சனையியற்றி
யவ்வியற் றலத்தை யகன்றிடா துறைந்தா ரத்தலத் தணைந்திடப் பெற்ற
செவ்வியோர்கருத்து மற்றொரு தலத்துச் சென்றிடக்குறிக்குமோவம்மா.

இருந்திடுங் காலை மருதநாயகன் முன்னீந்தருள் வரத்தினாற்றுங்கள்
வருந்துத லின்றிச்சித்தி யோரொட்டு மனதகினிற் குறித்தவை பிறவும்
பொருந்தினர்தவைவர் தடைந்துளோர் தமக்கும்புகழுறவுதவின பொன்னித்
திருந்துறு தலத்து முனிவரர் தமக்குச் செப்பினன் சூதமா முனிவன். (௧௦)

மாசறு தவத்தீர் முனிவரர் சூழ வானவர் மிடையிடை மருதுற்
றீசனை மருத நீழலினுறையு மிறைவனை யிலங்குவே லமலன்
பூசனை புரிந்த திறமிது மீதுபுக லுமையருளுருவாங்கத்
தேசுறு புகழ்க்கா ருண்ணிய தீர்த்தச் சிறப்பெடுத்தினி திசைத்திடுவாம்.

குமாரபூசைச்சருக்கம் முற்றும்.

ஆ திருவிருத்தம், ருசச.







# பிரகடனம்.

சோழநாட்டுத் திருவலஞ்சுழி குருகிரிமுதலிய திவ்விய ஸ்தலங்களை விநாயகர் சுப்பிரமணியர் முதலிய பரிவார தேவதாஸ்தலமாகக்கொண்ட மத்தியார்ச்சுன க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் சர்வலோகைக நாயகராகிய ஸ்ரீ-மகாலிங்கபெருமானை, அவ்வாறு சத்திரூபமாகிய சுப்பிரமணியபெருமான் கங்கையையழைத்து அதனால் அபிடேகித்து அருச்சித்த சரித்திரத்தை, இம்மருதவன புராணத்தால் உணர்ந்தகாலந்தொடங்கி, அம்முறையை உற்சவமாக நடத்தவேண்டி, ஆசையோடு அச்சுப்பிரமணியபெருமானைப் பிரார்த்தித்து, அப்பெருமானது கருணையால், நாம எமது அன்பர் அம்மாபேட்டைக் கந்தசாமிச்செட்டியார் திருமாந்துறைச்சபாபதிப் பிள்ளை, திருப்பணிப்பேட்டைக்கோவிந்தசாமிப்பிள்ளை ஆகியஇவர்களுடன் சாவசித்து வருட-முதல் உற்சவமாக நடத்திவருகின்றோம். அவ்வாறு நடத்தி வருதற்குக் காரணம் இப்புராணத்தை முன் உணர்ந்திருந்தமையேயாகலான், குமார பூசையின் மகிமை, மூர்த்திதலதீர்த்த விசேடம், சிவனருளால் நற்கதி அடைந்தோர் சரித்திரம் முதலிய, இவைகளனைத்தும் யாவர்க்கும் நன்குதெரிந்தாலன்றி அம்மகாலிங்க பெருமானிடத்துப் பத்திசெய்ய முடியாதாகலான், அவற்றை யாவரும வெளிப்படவுணர்ந்து பத்திசெய் துய்யும்பொருட்டு இம்மருதவன புராணத்தை அச்சிட்டு வெளிப்படுத்தினோம்.

இங்ஙனம்

கி. சாமிராவ்காடே.

உ

கணபதிதுணை.

# மருதவனபுராணம்.

(இரண்டாம் பாகம்.)

இது

கும்பகோணம்

சைவப்பிரகாச வித்தியாசாலைக்

கதிபதியாகிய பண்டித

## தர்க்ககுடார தாலுதாரி

அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

திருவிடைமருதூர் ச. சாமிநாத தேசிகர், அம்மாபேட்டை கந்தசாமிச் செட்டியார், திருமாந்துறை சபாபதிப் பிள்ளை, திருப்பணிப்பேட்டை சி. சொக்கலிங்க பிள்ளை, கோவிந்தசாமிப் பிள்ளை, சுப்பிரமணியப் பிள்ளை ஆகிய இவர்கள் கேட்டுக்கொண்டபடி,

திருவிடைமருதூர்

குமாரபூஜை மகோத்சவம் நடத்திவருகிறவரும்,

ஸ்ரீகிருஷ்ணசாமி காடேராவ் சாகேப் அவர்களின்

குமாரருமாகிய

**சாமிராவ்காடே அவர்களால்**

கும்பகோணம்

"லார்ட் ரிப்பன் அச்சாபீசில்"

பதிப்பிக்கப்பட்டது.

---

1893.

உ

சிவமயம்.



# காருண்ணியாமிர்தச்சருக்கம்.

---

நவையறு தவந்துச் சூதமாமுனிவ னனைமுகப் பங்கய நோக்கிச்
சவுனகர் மொழிவார் † சையமால் விலங்கறன்னி னின்றுங் கணைமுனிவர்
பவமறு பொன்னி கங்கைபொன் கூபம் பரவு காருண்ணியதீர்த்த
மிவைகளின் மூழ்கி யேனையதீர்த்த மெவற்றினு மாடினமொன்றீர். (௧)

இன்னுமத்தலத்தி லெந்தனைத் தீர்த்த மிலங்கிடு மவற்றிட மியாவை
யன்னவை யமைத்தோரியாவ ரங்கவற்றினுடி யின்புற்றவரியாவர்
பன்னுக வெனவே வணங்கலுஞ் சூதன்பகரு நல்லிடை மருதினுக்கு
முன்னுகத் தெல்லை நான்கியோசனை மேன்மூன்றிற்கு மொங்வொன்று
குறைவே. (௨)

திகழுறு மிருமுப்பத்து முக்கோடி தீர்த்தமு முறையுமத் தலந்திற்
பகரு மன்னவற்றுட் சில வெடுத்துரைப்பாம் பரவுகாருண்ணிய வமிர்தம்
புகழுறு மவைகளெவற்றினு மேலாய்ப் பொலிவுறு மதிற்கதி ரிரவி
தகவொனுமிராசி பொருந்து முற்பகலிற் றனிப்பகல் படிவது விசேடம் ()

மருமலர்த் தலையோன் றிருமகள் கொழுநன் வயங்குருத்திர னெனுமூவ
ருருவ மாமச்சு வந்நமந் தீர்த்தத் தோங்கு மீசானதிக் கிலங்கும்
பொருவிலன் னதையந்தீர்த்த முற்படிந்து புகழ்மதிவாரத்திற்காலை
வரு*தரிசத்திலேழ் வலம்புரியினுல கெலாம் வலம் புரிபலனும். (௪)

பன்னுநான் மறையை விடுத்திடுபனவர் பரகதி யருளி லிங்கத்தைக்
கன்னியர்தமை விற்றவர் மதுவுண்டார் கருதிடு சிரார்த்தம் விட்டவர்கள்
பொன்முதற் களவுகொலை புரிந்திட்டோர் போற்றிடு குரவனை யிகழ்ந்தோர்
துன்னுமிக் கொடியோரியாரு மத்தீர்த்தந் தோய்ந்திடின் முத்த ராகுவரால்

அறைந்திடு பதினென்காய வித்தைகளு மகத்தினில விருறாஉ மின்னும்
புறந்திகழ் செல்வ முதலவா மைசுவரியமுங் குறித்திடிற் பொருந்து
மறந்தரு பகையும் பிணிகளுநீங்கு மாறிலா வரனுரு வெய்துஞ்
சிறந்தகாருணிய வமிர்தமா மதனிற் சென்றினி தாடினர் தமக்கே. (௫)

---

† சகியம் என்பது-தென்மொழியில் சையம என்றாயிற்று.

*தரிசம்—அமாவாசை. இத்திதியில் சூரிய சந்திரர்கள் ஒருங்கு கூடிவரக் காணப் பெறுதலின், அதற் கிப்பெயர் போந்த வாறுகாண்க. [திருச்=காண், பார்.]

மங்கல முறுகா ருண்ணிய வமிர்த வாவியிற் படிந்திடி னொருகாற்
றுங்கமா மினிய தீர்த்தங்க ளனைத்துந் தோய்ந்திடு பேறுவந் தெய்து [ள்
மங்கதி னொருகாற்றருப்பணஞ் செயினோ ராண்டினிற் சார்பிதிர் தினங்க
பங்கமி லெண்ணூற் றுறிற்செய் சிரார்த்த பலன்கொடுபிதிர்களுண் மகி
ழ்வார். (எ)

அங்கதிற் படிந்து துயர்தொலைத் தின்ப மணைந்துளோர் தமிற்சில ரிசை
கங்கைநல் யமுனை தாமிர பன்னி காத்தியா யணிபுகழ் வாணி [ப்பாங்
துங்கபத் திரைகோ தாவிரி பவானி சோணையா தியநதி மின்னார்
திங்கள்சூழ் சிகரக் கைலையங் கிரியிற் சென்றெதி ரிறைவனைப் பணிந்து.

அங்கணு கைலை யிறைவவிவ் வுலகோ ராற்றிடு பவமெலாம் படிவுற்
றெங்கள்பால் விடுத்துச் சேறலா லியாங்க ளெழில்குலைந் துடலெலாங் க
றுத்தே, மிங்கெமை யனைய கொடியதீ வினைவிட் டேகுமா றருள்புரி
கென்றார், *சங்கர னெனுந்தன் பேரினுக் கிசையத் தற்பர னுளமகிழ்ந் தி
சைக்கும். (கூ)

பொன்னியின் றென்சார் வளரிடை மருதிற் போற்றுகா ருண்ணிய வமி
ர்தந், தன்னிடை மேட மதிமுத னளிற் சாற்றுகற் கடகமெய் திடுங்காற்
றுன்னின ரொருகாற் றோய்ந்தெழு ந்திடுமுன் றொல்வினைத் துடக்கெலா
மகலும், வன்னிமேற் படிந்த பஞ்சுபோற் கதிரோன் வருமுனந் தொலை
யிருட் கணம்போல். (க0)

நீயிரும ணைந்து படியினத் தினத்தி னிங்கிடும் பவக்குல மனைத்துந்
தூயரா குவிரொன் றுரைத்தன னவர்க டொழுதுறு விடைகொடு மீண்டு
மாயிருட் குலங்க ளனைப்படர்ந் தனைய மாதலத் திலங்குமத் தீர்த்த
மேயினர் படிந்தார் படியுமுற் படிந்த வினைக்குல மனைத்துமாய்ந் தனவே

இரும்பினுக் கிரத குளிகையின் றுடக்க மெய்திடப் பசும்பொனு மது
போற், பெரும்புன லதனிற் படிதலும் வினைபோய்ப் பேரொழி லடைந்தது
நோக்கி, யரும்புகழ்த் தீர்த்த மடந்தையர் மகிழ்வுற் றணியிடை மருதின்
வீற் றிருக்குஞ், சுரும்புறு கடுக்கை புனைபரஞ் சுடரைத் தொழுததோத்
திரம்பல விசைத்து. (கஉ)

அவரவ ரிருக்கு மிடங்களி னனைவுற் றன்றுதொட் டாண்டினுக் கொரு,
கா, னவிலுறு மேட மதிமுதற் பகலி னண்ணியாண் டனையதீர்த் தத்தி
னுவகையி னேகும் படிந்தது காறு முற்றிடு கொடியதீ வினையுங்
கவலையு மகற்றி வருவரிவ் வாறு களிப்புறப் பயின்றிடுங் காலை (கங)

---

* சங்கரன்=சிவன். தன்னை வழிபட்ட ஆன்மாக்களுக்குச் சுகத்
தைச் செய்பவன். [சம்=சுகம், கரன்=செய்பவன்.]

வேறு.

வட்ட வார்கட லகழியும் வான்ருேடு மதிலு
மட்டு லாமலர்ப் பொழிலுஞ்சூழ் மிதிலையில் வாழ்வோ
னட்ட மூர்த்திபா லன்பிஞே னுலகினி தாள்வோ
னிட்ட ரோமனென் றிசைத்திடு மியற்பெய ருடையோன் (கச)

அரிய கேள்விய னுளனொரு காவல னவனுக்
குரிய காதலி பெயரினைச் சுகேசியென் றுரைப்பர்
தெரியு மன்னவன் வனப்பினிற் றிருவினிற் சிறந்தாள்
பரிவி ஞேங்குகற் பியரிலருந் ததியெனப் படுவாள். (கரு)

அந்த மாதுட னீடுநா ளின்புறு மனையான்
மைந்த ரின்மையா னென்செய்வா மெனமனம் வருந்திச்
சந்த நான்மறை யறைந்திடு தானங்க ளநந்த
முந்தி யற்றினன் பற்பல தருமமு முயன்றான். (கசா)

மதங்க னிந்திடு களிற்றவ னிங்ஙனம் வளர்நா
ளுதங்க னென்றொரு முனிவா னவனிடத் துற்று
னிதங்க லந்திடு மொழியவ னெழுந்தவன் கமல
பதங்க ளிற்பணிந் தியான்செயும் பணியெனை யென்றான். (கஎ)

எண்ணு றும்பல தருமநீ யிழைத்தல் கேட்டுன்னைக்
கண்ணி நோக்கிட வந்தனங் காதலி னீண்டுப்
பண்ணு கின்றன மொருமக மதற்குநின் பாங்கர்
நண்ணு றும்பொருள் களிற்சில நல்குக வேண்டின். (கஅ)

அறத்தின் மேலனீ யாதலி னவற்றையா மேற்றுத்
திறத்தி னற்றுமவ் வேள்வியிற் செலுத்துது மென்ன
மறத்தி னீங்கிய மாதவ னிசைத்தனன் மன்னன்
குறித்தி டும்பொரு ளலகில பரிவொடுங் கொடுத்து. (ககூ)

எளிய னென்றனை மகவிலாத் துயரமொன் றெய்தித்
தளர்வு செய்கின்ற தன்னது தனக்கொரு தளர்வீண்
டளிமி குந்திடு முனிவர விளைத்தியென் றறைந்தான்
களமி டற்றவன் றனைநினைந் தம்முனி கழறும். (உ0)

அருணை வண்பதி திருவையா றணிகொள் மாயூர
மருள கற்றெழு முனித்தலம் வளரிடை மருதூற்
றுருவ நீடுயர் புனல்படிந் துருத்திரற் கிலக்கந்
தருண வில்வமுந் *துரோணமும் பணிந்தெதிர் சாத்தில். (உக)

---

* துரோணம்=தும்பை, திரு-என்னும் முதனிலைக்குக் கொல்,

சேயு தித்திடு மவற்றினிற் றிருவிடை மருதி
னேயும் வல்லையி னித்திற யத்தலத் தியற்றி
மேய கண்ணனுந் தசரத வேந்தனு முன்னாட்
டேய மைந்தரைப் பயந்தனர் சோதிதன் னருளான். (உ௨)

அத்த லங்களி னியுமுற் றுற்றி னிவ்வாறு
புத்தி ரற்பெறு குவையென முனிவரன் போர்ந்தான்
முத்த மூரலொண் மனையொடு முனையடு மரசன்
சுத்த நீடுறு மருவேமுன் றுன்கினுஞ் சூழ்ந்து. (உ௩)

இனிய தீர்த்தங்கள் படிந்தரு ளீசனை யிறைஞ்சி
வினைய கற்றுறு சிவார்ச்சனை விதிப்படி யியற்றி
யனைய மாதலங் களிற்சில வைகனன் கமர்ந்து
தனைநி கர்த்திலங் கிடைமரு தெனும்பதி சார்ந்தான் (உ௪)

சார்ந்து காருணி யாமிரு தத்தடம் படிந்து
வாய்ந்த சிற்றிடை யுடைப்பெரு நலமுலை மனுளற்
சூழ்ந்தி றைஞ்சிநின் றருச்சனை துலங்கிடப் புரிவுற்
றேர்ந்துநல்லெழின் மனையொன்றி லிருந்தனன்மகிழ்ந்து. (உ௫)

விருப்பி னோடங்குச் சிலபகல் மேவுமுன் மனைவி
கருப்ப மெய்தின ளனையதோர்ந் தகமிகக் களித்துப்
பொருப்பு வின்மரு தீசன்பான் மிகுமன்பு பூண்டான்
மருப்ப யின்றிடு கோதையும் மகவினைப் பயந்தாள். (உ௬)

சருது மைந்தனைக் காதன்மீ தூர்ந்திடக் கண்டான்
பிருது கீர்த்தியென் றுருதனிப் பெயரினி தளித்தே
மருத நாயகற் களவில்பொன் வழங்கிநற் கதிரோன்
றருதி னம்பல சென்றபின் சார்ந்தனன் மிதிலை. (உ௭)

---

ஹிம்சி என்னும் அர்த்தமுண்மையால் அம்முதனிலையினின்றுந் தோன்றிய துரோணம் என்னும் இப்பதத்திற்கு, இதன் இலை உரக கீடவிஷம், சிலேஷ்ம சந்நி, வாதம், கபம், அக்கினிமந்தம், சிரநோய்களையும், இதன் புஷ்பம் தாகரோகம், சந்நிபாதசுரம், நேத்திர ரோகங்களையும் நீக்குதலான், நோய்களை நீக்குவது என்பது பொருளாதல் அறிக. இன்னும், தும்பை தன் பூவை எடுத்துச் சிவபிரானைப் பூசித்த ஆன்மாக்களது பாபங்களை நீக்குதலின் அப்பெயருடைத்தாயிற் றெனவும் உணர்க. வில-என்னும் முதனிலைக்குப்பேதி, பிரி என்னும் அர்த்தமுண்மையான், அதினின்றுந் தோன்றிய வில்வம் என்னும் பதத்திற்குத் தன்னை யுண்டவர்களுடைய மேகம் குட்டம் முதலாகிய நோயை அவரினின்றும் பிரித்துவிடுவது என்றும், தன்னைப்பூசித்தவருடைய பாவத்தை அல்லது தன்பத்திரத்தை எடுத்துச் சிவபிரானைப் பூசித்தவருடைய பாபத்தை அவரினின்றும் பிரித்து விடுவது என்றும் பொருளாதல் போல வென்க.

மிதிலை யுற்றினி திருக்குநாள் விளங்கிளம் பிறைபோற்
புதல்வ னோங்கியெண் ணிரண்டெனும் பருவமுன் பொருந்த
மதிய மைச்சனோ டொருதினஞ் சூழ்ந்துதன் மகற்குக்
கதுமெனச்செய வேண்டுநற் கடிமணமென்ன. (உஅ)

தேறு மந்திரத் தலைவனு முளத்தினிற் றேர்ந்து
கூறு வானிந்த வரசிளங் குமரனுக் கேற்ப
வேறு கண்டிலன் சுபாங்கியென் றொருகொடி மேவு
மாறில் வண்புகழ்க் காசிமன் னவன்மகண் மன்னோ. (உகூ)

அனையள் கண்ணுறுச் சுயம்வரம் வரித்திடு மாங்குன்
றனைய னேடேகீ யுறினவன் றனியெழி னோக்கிப்
புனைவள் பூந்தொடை மகிழ்ந்தெனப் புகன்றன னிருப
னினைய தேசெய லென்றவ்வா றேகின னன்றே (கூ0)

காசி மன்னவ னிவன்வர வுணர்ந்தெதிர் காணூஉ
வாச முற்றிட வசதியும் வரிசையு மளித்தான்
பேசி யுற்றதன் செயலவண் பெரிதிருந் திடுநாண்
மாசில் செங்கதி ரோதினன் மறியதன் மீது. (கூக)

ஆய புண்ணிய தினத்தினிற் கங்கையி னாடிச்
சாயன் மன்னவன் சிலரொடுங் கரையிடைச் சார்ந்தான்
போயி றங்கினன் றனிமையிற் புரவலன் புதல்வன்
மேய நற்பொழு தேகின்ற தென்றுபின் விரைந்து. (கூஉ)

முந்து மன்பொடு மூழ்கினன் மூழ்கலுங் கங்கை
பந்த பாசநீக் கிடைமரு தருட்புனல் படிவா
னந்தர் வாகினி யாய்விரைந் தவனொடுஞ் சென்று
ளந்த வாவியி லெழுந்தன னங்குமூழ் கினன்போல். (கூகூ)

மிகவு நீடெழி லெய்திவண் கரையிடை மேவிச்
சகம ளந்திடு தவளமால் விடைமிசைத் தயங்கும்
பகவ னின்னருட் டிருவடி பணிந்தவற் றுதித்து
மகிழ்வு நீடியெதிர் நின்றனன் மன்னவர் வியப்ப (கூச)

---

* பகவன்=சிவன். ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறிற்கும் பகம் என்னும் பெயருண்மையின், அவ்வாறினையும் உடையன் என்பது அப்பகவன் என்னும் பெயருக்கு அர்த்தமாதல் அறிக.

காம னேயிவ னெனச்சொல்வார் காமரு மென்னிற்
பூமன் வார்சிலை கொளுமலி தின்மையாற் போதின்
மாமனே யெனக் கூறுவா ரவனெனின் மலர்க்கை
நேமி யுற்றிடு மென்பர்மற் றியானென நினைவார் (௬௫)

இந்த நீர்மையிற் சிலருறச் சிலரரு கெய்தி
யெந்த வூருனக் கென்றன ரிலங்குமப் பதியின்
முந்து தித்ததூஉ மகன்றதூஉம் பகீரதி மூழ்கி
வந்தவாவியி னெழுந்ததூஉம் வகைப்படச்சொன்னான். (௬௬)

சென்னி யித்திற முணர்ந்தறு சிறுவனைக் கூவித்
தன்னி லுற்றிட விருத்தின னாங்கவன் றாதை
மன்னு கங்கையின் மூழ்கிய மகனெழுந் திலனென்
றின்னல் வாரியின் மூழ்கினா னிரங்கிமெய் பதைத்து. (௬௭)

தேடு வான்வினைந் தநேகரை விடுதலுஞ் சென்று
நாடு மன்னவர் பாதலத் தளவுமுன் னாடி
வாடி வந்தன ரதுகண்டிம் மடிவிடை நானுங்
கூட வீழ்வனென் றெழுந்தனன் றறிக்கு மப்போது. (௬௮)

வேறு.

நீதுயர் தவிர்தி மன்னநின் புதல்வ னிலவுசீ ரிடைமரு திடத்து
மாதனித் தீர்த்த மாடுதற் கேகும் வளர்புகழ்க் கங்கைதன் னுடனே
பாதல நெறிக்கொண் டேகினனங்குப் படர்ந்திடிற் காணலா மென்ன
மீதலத் திறையோ னருளினு லெவரும் வியப்புற வெழுந்ததோர் வாக்கு.

எழுதரு மொழிதன் செவிப்புகுந் திடலு மிருகரங் குவித்துள மகிழ்ந்து
செழு நகர்க் காசிப் புரவலன் றனக்குச் சென்றவர் திடுதுமென் றுரைத்
துத், தழுவுறுசேனை யொடுஞ்சில பகலிற் *சயிலமா தியவெலாங் கடந்து
பொழில்புடை யோங்கு திருவிடை மருதிற் பொருந்தினன் புதல்வனைக்
கண்டான். (௭௦)

தன்னெதி ரணைந்து பணிந்திடு மகனைத் தடக்கையா லெடுத்துமார் பணை
த்து, வன்னியிற் படிந்த மெழுகினுள்ளுருகி மற்றவன்றனைப்பிரிந் ததனாற்
றுன்னிய துயரு மவனிடத் தன்புந் துலங்கிட வெளிப்படு கின்ற
தென்னநீணயனபங்கயங்களினின்றெழுந்திடுபுனலின்மூழ்குவித்தான். ()

வளவனுங் கணைந்து தேற்றிடத் தெளிந்து மகிழ்ந்துபின் மகனொடு மேகி
யளவில்சீ ருறுகா ருண்ணிய வமிர்த மணைந்துதோய்ந் தியற்றிகன்னியமங்
கிளர்வுறு மணிப்பொற் கோயிலு ளெய்திக் கீற்றிளம்பிறைநறுங்கண்ணி
யொளிர்சடை மருத நாயகன் பாத வுபயபங் கயம்பணிந் தெழுந்து. ()

*சைலம்=மலை. சிலையால் ஆயது. [ சிலை=கல். ]

வேறு.

அன்றுனைப் பிரிந்த பின்று னம்புய மலர்த்தா டன்னை
யொன்றுசிற் றறிவு தன்னா லுன்னல ளாகி யாங்கு
நின்றவென் னிலைமை கண்டு நினைவுதந் தருளாற் கூவி
யின்றெதிர் காட்சி தந்த விடைமரு திறைவ போற்றி. (௩௩)

மருவிடை மலர்த்தண் கொன்றை மதிவளர் சடைய போற்றி
கருவிடைப் புகாம லென்னைக் காத்தருள் கடவுள் போற்றி
பொருவிடை யூர்தி போற்றி பூரண புராண போற்றி
திருவிடை மருதில் வாழுஞ் செய்யபொற் சோதி போற்றி. (௩௪)

என்னநின் றேத்துங் காலை யீசனு காச வாக்கான்
மின்னுவேன் மன்ன நம்பால் வேண்டுக வரங்க ளென்றான்
மன்னநின் பதத்தை யென்று மறந்திடா மனமு மன்புந்
துன்னுறத் தருக வென்றான் சோதியு மவர்க ளித்தான். (௩௫)

தகர்மதிப் பிறப்பி லீசன் றனக்கெழில் விழாவுஞ் செய்தாங்
ககமகிழ் மணிப்பூண் செம்பொ னளவில வுதவி செய்து
பகரருட் டீர்த்தஞ் சூழப் படித்துறை யமைத்துப் பின்னர்
மகனொடு மகிழ்ச்சி கூரு மன்னவன் மிதிலை யுற்றான். (௩௬)

அங்கவன் வாரணாசி யடைந்தன னவன்றன் மைந்தன்
பொங்கெழி லினிது கண்ட புரவலன் புதல்வி யன்று
ளிங்குவந் துற்ற பின்ன ரியானவன் றனக்கே யெய்வன்
கொங்கலர் தெரிய லென்னாக் கூறின ளிருந்தா ளன்றே. (௩௭)

உற்றிடத் தீர்த்த மெய்தி யோங்கெழி லடைந்து கன்னல்
விற்றனிக் காளை யென்ன விளங்கிடு மகனோ டோங்கு
கொற்றவன் வந்த செய்தி குலவுறு மொற்றர் கூறக்
கற்றவர் புகழுங் காசிக் காவல னுவகை யெய்தி. (௩௮)

கதுமெனப் புதல்விக் கோதி மற்றவள் களிப்பு நோக்கிப்
புதுமண வோலை தீட்டிப் பொலிவுறு மிதிலைக் கேவி
விதுமுக மருகன் றன்னை மேவுற வழைத்து நன்கு
மதுமலர்க் கோதை மின்னை மணம்புரிந் தளித்தான் மன்னோ. (௩௯)

இன்னுமித் திறமத் தீர்த்தந் திடைப்படிந் தெண்ணி லார்கண்
மன்னிய துயர நீக்கி மனத்தினிற் குறித்த வெல்லாந்
துன்னினர் பெரிதும் மீது சொல்லுதும் பாணதீர்த்த
மென்னவோர் தீர்த்த மாங்கே யிலங்கிடு மதன்றன் மேன்மை. (௪௰)

காருண்ணியா மிர்தச்சருக்கம் முற்றும்.



உ.

சிவமயம்.

# பாணதீர்த்தச் சருக்கம்.

யாணி நாயகன் முதலினோர் வணங்கிடை மருதந்
தாணு வின்வட கீழ்த்திசைத் தங்குமோர் தீர்த்த
நீண லந்தரு விற்றிடை நிகழ்த்துமீ ரொட்டிற்
பாண தீர்த்தமென் றதன்பெய ருலகெலாம் பரவும். (௧)

தெரிக்கு மப்பெரு வாவியின் றேவதை யிராமன்
விரிக்கு நீழலோ ரபசதன் றெண்புடை யேவும்
பரிக்கு மன்னதைச் சூழ்நரம் பிளந்தவேற் படையோன்
றரிக்கு மந்நடத் தருகினில் வசிட்டனுந் தவந்தோன். (௨)

தண்ட கத்தனி வனத்திடைச் சார்ந்தெழி லிராமன்
பண்டு சஞ்சரிப் பயமொரு பகலினுங் கடைந்தான்
கண்டி லன்புன லுறுகிய மஞ்செயக் கையின்
* வண்டு தன்னைமன் விடுத்தனன் மலர்ந்திடு †பூமேல். (௩)

அங்க ணீடொரு வாவியா யதனிடை நின்றும்
பொங்கு தண்புன லெழுந்தது பொருந்துமப் புனலின்
மங்க லம்பெறப் படிந்தன னியமங்கண் மற்றும்
பங்க மின்றிநன் கியற்றினன் பரிந்தனன் பின்னர். (௪)

அரசு நீழலுற் றிருந்தன னிருந்திடு மமையத்
துறைசெ யுங்கணை வடிவதா யநாதியா யொளிரும்
பரசி வன்றனைக் கண்டனன் படுகரின் வடபால்
விரைசெய் தண்மலர் மருவுற விளங்கொரு தருக்கீழ். (௫)

எழுந்து சென்றனன் பரியொடும் விரைவொடு மெதிரே
விழுந்து மெய்யுறப் பணிந்தனன் விளம்புதன் கணைசெய்
யழுந்து நீர்கொடு மகிழ்வுட னாட்டினன் கிடைத்த
செழுந்தண் கூவிள மாதிகொண் டருச்சனை செய்தான். (௬)

மேற்றி சைத்திரு முகத்தினின் றித்திறம் விளைத்திட்
டேற்று வெல்கொடிப் பரமனே யிடைமரு திறைவ
தோற்றி யிங்கெனக் குணர்வுதந் தனையெனத் துலங்கப்
போற்றி செய்தனன் செய்துமே வின்னன புகலும் (௭)

---

* வண்டு=பாணம். † பூ=பூமி.

நீடு வாளியிற் செய்திடு நிமித்திஞ னிதனுக்
கீடு மன்னுறப் பாணதீர்த் தப்பெய ரிலையயுங்
கூடு மன்புட னிதனிடைக் குறுகியா டினர்க
ளாட கத்திரு நாட்டினி லமரரா யவிர்வார். (அ)

இடப மாமதிப் பூரணை யினிலிதின் மூழ்கிப்
படவ ராவணி யித்தனிப் பரமனைப் பணிந்தோர்
திடம தாயுறு மன்பினு லருச்சனை செய்தோர்
நடமி யைந்திடு சிவபத நண்ணியின் புறுவார். (௯)

என்று நீடிய வரங்கொடுத் தெழிலருட் புனலிற்
சென்று மூழ்கிமா மருதநன் னிழலிடைத் திகழுங்
குன்ற வில்லியைப் பணிந்தவ னெருளுநீ இக் குலவு
மன்ற *லஞ்சரோ ருகபத மனதிற்றி யகன்றான். (௧௦)

அனைய ஞக்கிய பாணதீர்த் தந்தனி லாடி
யினிய பாறயிர் நெய்பசு வேதியர்க் கீந்தால்
வினைகள் யாவையு மகன்றிடும் விளங்கவங் கிருந்து
மனதி லஞ்செழுத் தெண்ணிடின் மருவுநீ டின்பம். (௧௧)

சாற்றி டன்னதிற் றிலங்கொடு தருப்பண மியற்றி
லாற்ற லுற்றிடு கயைதனி லாற்றுமப் பலனும்
போற்றி டன்னதா மத்தடம் பொருந்திய வேற்ற
மேற்ப ராசர தீர்த்தமான் மியமெடுத் திசைப்பாம். (௧௨)

பாணதீர்த்தச்சருக்க முற்றும்.

—):◡:*:◡:(—

உ

சிவமயம்

## பராசரச் சருக்கம்.



வசையில் காருணி யாமிரு தத்தினோர் வடகீழ்த்
திசையி னோர்கணை வீழ்ந்திடு சேய்த்திஞேர் தீர்த்த
மிசை வளர்ந்திடு பராசர தீர்த்தமென் றிலங்கும்
விசைகொள் வின்மதி மூழ்குதல் விசேடமா மதனில். (௧)

---

*சரோருகம்=தாமரை. [ஸரஸ்=தடாகம், ருக்=முளை, வளர்.] எனவே தடாகத்தில் முளைப்பது என்க.

வாயு தேவன்மற் றதற்குறு தேவதை மருங்கின்
மீயு யர்ந்துநின் றிலங்குமோர் வேம்பெனுந் தாரு
மேய தன்புடைக் கண்ணுவ முனிவரன் விளங்குங்
காயுஞ் சூற்படை வயிரவ னதைநிதங் காப்போன். (உ)

பொலியு மன்னதிற் படிந்தனர் பூசுரர் தமக்குத்
திலம ளித்திடிற் றானமாய்த் தீவினை யகலுங்
குலவு சில்பக லதன்புடை வசித்திடிற் கூரு
மேலிவு நீங்கிடும் புனிதமெய் திடுமன மிகவும். (௩)

அன்ன தாகிய தீர்த்தமா புரத்ததா யவிருந்
துன்ன திற்படிந் தநேகர்கள் பழவினை தொலைத்தோ
ருன்னு மற்றதைப் பராசர தீர்த்தமென் றுரைத்த
தென்ன காரணத் தாலெனி லஃதெடுத் திசைப்பாம். (௪)

முச்ச கந்திரி புகழுறு பராசர முநிவன்
கச்ச கந்திக ழிளமுலைப் பனிமொழிக் கனிவாய்
மச்ச கந்தியைப் புணர்ந்ததின் வருந்தவ மகற்ற
நச்ச கந்தினம் விளைத்திட நாள்பல கழித்து. (௫)

ஓது மோர்பக லெதிர்ப்படு முரோமச முநிவன்
பாத பங்கயம் பணிந்தெழுந் தன்பொடு பகரு
மாத வத்தனி மேருவே மறையினு காமே
சோதி தன்னருட் கினியனே யெனப்பல துதித்து. (௬)

பன்னு தெண்டிரைப் பரவைசூழ் பாருலகிதனுண்
மன்னு புல்லறி வுற்றிடு மனுளர்நெஞ் சென்னுந்
துன்னு மீனினங் கவர்க்கவர் தொடர்வலை யன்றோ
கன்னன் மென்மொழிப் பொன்னனார் கதிர்முக வலயம். (எ)

*ஊழி னிற்பெரு வலியுள யாவைமற் றொன்று
சூழி னும்மஃ ததற்குமுன் றோன்றிடு மன்றே
பேழை யேனெழின் மச்சகந் தியினிடத் தின்பம்
வீழ லுற்றன னதனைமுன் விலக்கில துள்ளம். (அ)

அன்ன தன்பினிண் டதைக்குறித் தருவருப் பெய்தி
யின்ன லுற்றிடு கின்றதி யானுமத் துன்பந்
தன்னின் மூழ்கினேன் புகலுமிக் கொடுந்துயர் தவிர்தற்
கென்னை செய்குவ னென்றன னுரோமச னியம்பும். (௯)

---

*திருவள்ளுவர் குறள். ௩அ-ம் அதிகாரம்,-ஊழ்.
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

## வேறு.

தேறுபொற் பணிகளுந் திகழு மாடையு
மாறிடப் பிரித்திடின் மாத வொன்றிடல்
கூறிடு மலப்புழுக் குரம்பை யேயலால்
வேறுறக் கண்டதென் விளம்பு காலையில். (க0)

தோலிது நரம்பிது சோரி நீரிது
கோலுறு தசையிது குடர்மற் றீதென
வேலுறச் சிலபக லெண்ணும் போதினின்
வேல்விழி மகளிர்பால் வேட்கை நீங்குமால். (கக)

திருவுறு மகளிர்பால் வேட்கை தீர்ந்திடின்
மருவிடும் வீடுணர் மருவு போதினும்
பரசிவத் திடைமனம் பற்றி நிற்பினு
மிருவினை சமனுறு மெனினு மெய்திடும். (கஉ)

நிலைபெறு பரத்திடை நிலவு நெஞ்சனை
யுலகினி லவர்செயும் வினைவந் தொன்றிடா
வலியுறு மந்திர மருந்து வல்லனை
நலிவுசெய் திடுங்கொலோ நண்ணுந் தீவிடம். (கங)

தூயவ நின்மனந் தொடர்ந்து நிற்றலிற்
றீயது நின்னையுஞ் சேர்ந்தி டாதினி
யாயினுஞ் சபலநீ யடைந்த தன்மையான்
மேயது போம்வழி விளம்பு வாமரோ. (கச)

இனிதரு ளிடைமரு தடைவுற் றெண்ணில் சீர்க்
கனகதீர்த் தத்தினிற் கலந்து மூழ்கியே
புனிதநீர் வேணியற் பணிந்து போற்றிடிற்
றுனிதவிர்ந் துன்மனஞ் சுத்தி யெய்திடும். (கரு)

என்றுநீ டருளொடு மினிதி யம்பினா
னன்றென விடைகொடு நவில்ப ராசரன்
சென்றுயர் முனிவரர் சிலவர் சூழுறத்
துன்றெழி லிடைமரு திடத்திற் றுன்னினான். (கசு)

கலந்துறு வளமெலாங் கண்ணி னோக்கினா
னலந்தரு பொன்னியி னண்ணி யாடினா
னிலங்குருள் வாவியு மெழில்கொள் பொன்னெனத்
துலங்குறு வாவியுந் தொடர்ந்து மூழ்கினான். (கஎ)

மருதிறை யவனடி வணங்கி யேத்தினன்
பெரிதுகந் தேகினன் பிறங்கு மத்தடத்
தருகினிற் சிலபக லமர்ந்தி ருந்ததன்
கருதுநன் மனத்துறு கலக்கந் தீர்ந்தனன். (கஅ)

வேறு.

கனகமா தீர்த்தந் தோய்ந்து கடவினைதொலைத்தோம் வேளை
முனிபரற் பணிந்து மேலா மொழியவன் கருணை பெற்றே
மினையசீர்த் தடத்தின் பாங்க ரிருந்தகத் தூய்மை யுற்றே
மெனநினைந் ததனைப் பின்னு மெழில்பெறத் திருத்து வித்தான். (கசு)

பகருமந் நிமித்தந் தன்னாற் பராசர தீர்த்த மென்னப்
புகழுறு மினிய நாமம் பொருந்திய தினிவெம் பாவத்
தகளறு சோம தீர்த்த மான்மியந் தொடங்கு கின்றேந்
திகழுறு முமையாள் பங்கன் சேவடிக் கன்பு மிக்கீர். (உ0)

பராசரச் சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# சோமதீர்த்தச் சருக்கம்.

இந்தி ரன்முதற் கடவுள ரிசைபெறு குரவன்
சந்தி ரன்றனை யடைந்தெதிர் தாழ்ந்துநின் றேத்தித்
தந்தி ரஞ்சில வுணரநீ தருகெனக் கென்ன
முந்தி ரந்திட வினிதென மொழிந்திடு நாளில் (க)

காரா யந்தரத் தலைத்திடு கருங்குழற் பசும்பொற்
றேரா யச்சுறுத் தல்குலா டிகழவன் மனைவி
தாரா யென்பவள் கன்னலந் *தனுத்தனு வில்லோன்
போரா யாற்றிட வலியிலாண் மிகுமயல் பூண்டு (உ)

அனுதி னந்தரு பழக்கமு மிகுந்திடு மழகு
மினிது மேவுசந் திரனிடத் தியன்றனைக் கொடுமா

---

*தநு என்னும் பதங்களுள் முன்னது வில் எனவும், பின்னது சரீரம் எனவும், பாணங்களைப் போக்குதலினாலும் உணவு முதலியவற்றாற் பெருத்தலினாலும் வில்லிற்குஞ் சரீரத்திற்கும் அப்பெயர்கள் ஆயின எனவும் உணர்க. [தநு=எதிரில் வீசு அல்லது போடு. தநு=விஸ்தாரமாக்கு அல்லது பரப்பு]

மனைய மாரனை வேறுமென் றவன்றனை யழைப்பான்
றுனிகொ ணெஞ்சினுக் கிசைத்துமுன் விடுத்தன னேது. (௫)

மேவு மன்புறு தாதையே யாயினும் விளம்புந்
தாவில் காதல ராயினுஞ் சகோதர ரெனினும்
யாவ ராயினு மிளமையு மெழிலுமெய் தினரோற்
பாவை மார்மன மவரிடைப் படர்ந்திடு மன்றே. (௬)

விகுதி முன்னிடை நிலைமுத லவற்றொடு மேவப்
பகுதி யின்பொரு ளதனிடத் தவாவுறு பரிசிற்
றொகுதி யுற்றிடு பூண்முலை தொடர்ந்திட மயங்கி
மிகு திடத்துறு முளத்தசந் திரனுமே வினனே. (௭)

கலக வேல்விழி யவர்முகங் காணினு மவர்க
ளிலகு தீஞ்சொல்கேட் பினுமவர் தம்மையெண் ணிடினு
முலகி லாடவர் மனமுரு கிடுமெனி லுவகோ
வலிமை செய்திழுத் திடினெவர் மறுத்திட வல்லார். (௮)

முத்த மூரலின் மயற்கடன் மூழ்கிநீ டின்பந்
துய்த்த னன்னுளந் தேறினன் சூழ்ந்துபின் னவளை
யுய்த்த காதலிற் கொண்டுதன் னுலகினி லேகி
வைத்த னன்னினி திருந்தனன் மருவினன் மகிழ்ச்சி. (௯)

அன்ன தோர்ந்துட னெழுந்துசூ ழமரர்க ளோடு
பொன்னும் வெள்ளியுஞ் சதமகன் கொலுவினிற் போகி
மன்னு மித்திறம் புகன்றனர் மற்றவன் வெகுளூற்
றென்னை செய்தன னவன்றனை யழைமினென் றிசைத்து. (௮)

தேவர் கூவிட வெதிருறு திங்களை நோக்கி
யாவரும் பணிந் திடத்தகு குரவனுக் கிசைந்த
பாவை தன்னைநீ விரும்புதல் பான்மையோ விங்குன்
றூவ றன்னையு மவளையும் விடுகென வுரைந்தான். (௯)

பற்று பாவமும் பகையொடு பழியுமக் களங்கன்
சற்று மோர்ந்திலன் செருக்கினுற் றழீஇயவெங் காமங்
குற்ற மேற்றிடு மதுவினுங் கொடியதை யன்றோ
மற்றெ னக்கவ டனைவிட மனமிலை யென்றான். (௧௦)

அந்த வாசகங் கேட்டலு மமரர்க ளெவரு
மிந்தி ரன்றமக் கிசைத்திடு மேவலுஞ் சினமு
முந்து றப்படை கொடுசமர் செய்திட முன்னிச்
சந்தி ரன்றனை வளைந்தனர் பரிதிபோற் சார்ந்து. (௧௧)

நின்ற சந்திரன் றன்புடை நிகழ்பரி சனமுந்
துன்று மற்றுள படைகளுஞ் சூழ்ந்திடத் தானுங்
கன்றி முன்னுற வெதிர்த்தனன் கலந்திரு படையு
மொன்று வானவ வீரரு மெதிரெதி ருற்று. (கஉ)

தேரி லேறியும் விமானமேற் றிகழுற நின்றும்
வாரி லம்புவாள் வேல்கதை மழுவெழுத் திகிரி
கூர்கொண் முத்தலைச் சூலமா தியபடை கொண்டு
போரி யற்றின ரார்ப்பொடு புணரியோ ரிரண்டின். (கங)

விண்ண திர்ந்தது திகாந்தமு மதிர்ந்தது விளங்கு
மண்ண திர்ந்தது பாதல மதிர்ந்தது மற்றும்
நண்ணு மித்திற மதிர்ந்திடு வேலையி னதிரு
டண்ண லுந்திரு மாலுநான் முகனுமாங் கணைந்தார். (கச)

அரனரு ளேவ றன்னு லரவிந்த னருகி னெய்தி
யிருவர்தம் போரு மாற்றி யிந்துவைச் சினத்தி னோக்கி
வருதிவெண் மதியை நீயோர் மதியிலா திசனைச் செய்தாய்
குருவினில் லவண்மேற் காதல் கொள்வரோ வறிஞ ரன்றே. ()

அவடனை யினிமேலேனும் விடுதியென் றறைந்தா னல்லோன்
சவலமீ தூர வந்தத் தாரைதன் காத லாலே
பவமொடு பழியும் வந்து பலித்தன பலித்த போலுங்
கவலையென்னினியோர்போதுங்கைவிடேனவளையென்றான். ()

அந்தணன் பின்னுந் தக்க னாற்றிய வேள்வி தன்னின்
முந்துநீ பட்ட பாடு முழுவது மறந்தாய் கொல்லோ
வந்தது நாமிங் குன்பால் வள்ளலே வலினு லன்றே
தந்திடா யெனிலன் னாளைச் சபிக்குது முன்னை யென்றான். ()

அயனிது கூறவஞ்சி விடுத்தன னவளை யல்லோன்
வயினுறு கருவினோடு நாணொடு மயங்கு மன்னாள்
பயிலுறு *குருவின் முன்போய் நின்றனள் பார்த்திட் டன்னா
னியல்பிதோ மாதர்க்கென்னக் கொடுமொழி பலவு மீந்தான். ()

வெருளலும் பயந்து நாணி விதிர்ப்புற வொதுங்கி நின்றாள்
மகவினை யுயிர்த்தாண் மற்றம் மகவினை மகிழ்வி னோடுந்
திகழுறு கலையி னானென் சிறுவனென் றெடுக்க வந்தான்
றகவுறு குருவு மென்றன் றநயனென் றுரைத்துச் சார்ந்தான். ()

---

*குரு=சுராசாரியன். [கிரு=சப்தி, பேசு.] எனவே, தேவர்கட்கு ஞான த்தை உபதேசிப்பவன் என்பது பொருளாதல் அறிக.

இருவரு மதியி லாராய்ச் சமரினுக் கெழுந்திட் டார்க
ளருமறைக கொடியி ளுன்மற் றன்னதை மறித்துத் தாரை
திருமுக நோக்கி யிந்தச் சேயினை யெவர்பாற் பெற்றாய்
வெருளுறே லுரைத்தி டென்றா னுரைத்திலள் வெள்கி யொன்றும்.

மைந்தனங் கதனை யோர்ந்து தாயுறு வதன நோக்கிச்
சிந்தையிற் கபட மென்னே செப்புதி யுள்ள தென்றா
னந்தண னவனைச் செங்கை யமர்த்தி யன்னோ நோக்கித்
தந்தையா ரிவனுக் குண்மை சாற்றுதி வெள்க லென்றான். (உக)

விதுவென நாணி னோடு மெல்லென விளம்ப லுற்றாள்
கதுமென மகிழ்ச்சி யோடு கலைமதி யோடி யந்த
மதலையைக் கெடுத்து வந்து மடிமிசை யிருத்தி யன்னோ
னிதமுறு மறிவை யோர்ந்து புதனென நாம மீந்தான். (உஉ)

அன்னதை யுணர்ந்த தேவ ரனைவரு மதியை யாசான்
பன்னியைப் புணர்ந்த பாவி யென்றுமுன் பழித்திட் டார்கள்
பொன்னவ னெழுந்து சீறிப் பொருந்திடென் னழுகு மங்கி
யின்னலுங் கயமு மெய்தித் திரிதியென் றீந்தான் சாபம். (உங)

சொற்றிடு முன்ன ரந்தத் தூயவன் சாபம் வந்து
பற்றிய தலிதி னோடு பாவமு மருவித் திங்க
ளுற்றுளம் பதைத்துச் செவ்வா யுலர்ந்து தன்மேனி நீடு
பொற்பழி திறத்தி னோடு கயமுமேற் பொருந்தி மாழ்கி. (உச)

வேறு.

மெய்த்த வத்துரு வாசனோ டிவையெலாம் விளம்பி
யித்தகைப் பெருந் துயரினுக் கென்செய்கே னென்றா
னத்தவத்தினா னிவைகள்வெங் கொடுவினை யாகு
மூய்த்தி டின்னவை தமக்குமீண் டொருமருந் துளது. (உரு)

அந்த மில்புக ழிடைமரு தடைந்துபொற் றீர்த்த
முந்து றப்படிந் தவனுறை முதலவன் றன்னை
வந்த னஞ்செயி னல்லதை மருவுமித் துன்ப
மெந்த வாறெவ னியற்றினு மேகிடா தென்றான். (உசு)

நன்றெ னப் பகர்ந் தவனுமத் தலத்தினை நண்ணித்
துன்று மன்புட னனையதீர்த் தந்தனிற் றோய்ந்து
மன்ற லொன்றுகொன் றைச்சடை வரதனைப் பணிந்தான்
கன்று வெவ்வினை யகன்றது கதிரின்முன் னிருள்போல். (உஎ)

பண்ணி னீடுபற் பலதுதி பகர்ந்தனன் பரமன்
விண்ணின் மால்விடை மீதுமை தன்னுடன் வெளிநின்
றெண்ணி லாவர மகிழ்வுற வருளொடு மீந்தான்
வண்ண வெண்மதி யரனடி வணங்கிநின் றேத்தி. (௨௮)

*ஈசன் மேனியெண் வகையுளொன் றாய்விளங் கெழிலுந்
தேசு மிக்கவன் விழியிலொன் றாகிய சிறப்பும்
வாச நீடவன் வேணியில் வயங்கிடு வாழ்வும்
பேசு வண்கலை தேய்தலும் வளர்தலும் பெற்று. (௨௯)

மருத வாணனைப் பின்னருஞ் சிலபகல் வணங்கக்
கருதி யத்தலத் திருந்தன னிருந்திடுங் காலை
பொருவில் சீரருள் வாவியின் பூருவ திசையி
லொருச ரம்படு சேய்மையி லொருதடஞ் சமைத்தான். (௩௦)

சோம னாக்கிய திறத்தினாற் றுலங்குமவ் வாவி
சோம தீர்த்தமென் றடம்பதைச் சூழ்ந்துறுந் தெய்வஞ்
சோமன் காவலன் னீசனுங் கவுதமன் றுறவோன்
சோம வாரமாந் தினத்ததிற் றோய்ந்திடல் விசேடம். (௩௧)

தூய வப்பெரும் புனலிடை யன்புடன் றோய்ந்து
சாயல் வாணுதற் கன்னிகை தன்னுட னினிய
பாய சங்கனி வகையிவை பனவர்கட் குதவிற்
றீய பஞ்சபா தகமுத லியாவையுந் தீரும். (௩௨)

அருத்தி தன்னுட னத்தடந் தனிலணைந் தாடி
விரித்த தானமீந் திவ்வணம் வெவ்வினை தொலைத்துக்
கருத்த னீடரு ளெய்தினர் கணக்கில ரின்னுந்
திருத்த வன்புரி தீர்த்தமொன் றுளததூஉந் தெரிப்பாம். (௩௩)

காக மின்புறு வாவியி னிருதியிற் கணையொன்
றேகி வீழ்ந்திடு சேய்மையி னினிதொரு தீர்த்த
மாக விண்கொடு சந்திரன் பெயரினால் வயங்கு
மாகு மங்கதின் முநிதுரு வாசனா மறவோன். (௩௪)

---

*ஈசன் மேனி எட்டு பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்பனவாம். இதனை, "ஐம்பெரும் பூத மிருசுடரான்மாவன் றிவேறுலகிலை யவைதா, மும்பெரு வடிவ மெனப்படுமென்றே யோர்ந்துளோர்க் கிங்கிது தன்னா, லெம்பிரானீயே நிறையதிட்டாதா வென்பதற் கையமு முளதோ, வம்பரா மூர்க்கப் பேய்கடா மயக்கான் மாறுபாடுறப் பிதற்றுவரோ." என்னுஞ் சிவதத்துவ விவேகச் செய்யுளான் உணர்க.

திங்கள் காவலன் விருக்கமோர்ச் செழுந்துணர் வகுளஞ்
சங்க ரன்றனித் தேவதை சார்ந்ததிற் படிவுற்
றங்கு நெய்தில நெய்திடு கலையெழி லரிசி
கொங்கு லாமலர் சந்திவை யன்பொடு கொடுக்கின். (௩௫)

பூசை மிச்சில்பின் குலத்தினோர் புசித்திடு சேட
மாசை பூட்டிடு மடந்தைய ரயின்றிடு சேடம்
பேசு மின்னவை யருந்திய பெரும்பவ மகலுந்
தேசி கந்தரும் வன்மையுஞ் செல்வமும் பெருகும் (௩௬)

கறையு லாம்பனி மதிபினர்ப் பலபகல் கடந்தோர்
மறமி யற்றியன் னதன்பெரு வலியினாற் கலைகள்
குறைவ தேயலா விறைவுருக் குணத்தினை நோக்கி
யுறுமி தற்கினி யென்செயற் றிடுவதென் றுன்னி. (௩௭)

தருண பானுவின் மாதரார் தரித்திடு குழைக
ளிருண் மறைத்திடு மெழிலிடை மருதடைந் திறைவி
கருணை வாவியிற் படிந்துசென் றன்பொடு கவின்செய்
வருண மால்விடை மருதநா யகனடி வணங்கா. (௩௮)

இலகு பற்பல துதிகள்செய் தேகிமுன் னுணாசெய்
யலைத ரும்புனற் றடஞ்சனைத் தலியுறு கலைகள்
மலைகு னித்தவ னருளினால் வளர்தல்கண் டுகந்தான்
கலையி லென்னிலென் னிருக்கினுங் கவின்மரு விடுமோ. (௩௯)

பண்டு வந்துவெம் பாதக மகற்றிய பரிசுட்
கொண்டு வந்துபின் னருமுறு குறையதூஉ மகற்றி
விண்ட லத்துறு தன்பதி மேவின னன்றி
மண்டு மாலுழந் தயருமோ மருந்துவை கண்டோன். (௪0)

மருத் துலங்கிய கடுக்கையோ னடித்துணை வனசம்
விரித் திலங்கிடு தடாகமாங் கருத்தினீர் விதுவின்
றிருத் தகுந்தட மிரண்டுறு சிறப்புமிங் கிசைந்தா
முருத் திரப்பெருந் தீர்த்தமான் மியமினி யுரைப்பாம். (௪௧)

சோமதீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்

# உருத்திர தீர்த்தச் சருக்கம்

வன்ப ணிக்குலம் பூண்டிடு மருதவா ணனுக்குத்
தென்பு றத்திலெய் தவன்விழித் திருவருட் டீர்த்த
மின்ப மீந்திடு முருத்திர தீர்த்தமென் றிலங்கும்
பின்பு ரைத்துமப் பெயரதற் கெய்திய பெருமை. (௧)

கருட னன்னதைக் காத்திடு மீசனே கடவு
ளிருடி பிப்பிலன் றமாலமாங் கிலங்கிடு விருக்க
மொருதி னம்படிந் ததனிற்றேன் கம்பல முதவிற்
றிருகு வெம்பவூழ் தோடுதீப் பிணிகளுந் தீரும். (௨)

முன்னை நாளிடை நிமியென மொழிந்திடுந் திகிரி
மன்னவன் புரி தவத்தினால் வருதிட்ட கேது
மென்றுங் காவலன் மகவின்றித் தருமமிக் கியற்றிப்
பன்னெ டும்பகல் கடந்தொரு புதல்வனைப் பெற்றான். (௩)

மண்ட லம்பெரு மகிழ்வுற வந்திடப் புதல்வ
னண்டர் நாயக னடியர்பா லன்புடனளித்த
வண்டனிப் பொருட் பயனென வளர்தரு நாளிற்
கண்ட மாலையென் றுரைக்குநோய் கண்டது களத்தில். (௪)

களம திற்பிணி யுறமக வருந்துதல் காணு
வளவ னேருறு மருந்தொடு மந்திரச் செய்கை
யளவி லாவகை யாற்றலு மவற்றினீங் கிலதென்
றுளம திற்றுயர் கொண்டவ னுற்றன னன்றே. (௫)

காத்தி யாயன முனிவனக் காலையங் குற்றான்
பாத்தி யாசம னார்க்கியங் கொடுத்தனன் பணிவுற்
றார்த்தி யாதுளத் திடையென வவனுள துரைத்தான்
மாத்தி யானமுற் றான்றனை மாதவ னிசைக்கும். (௬)

மன்ன நின்மகன் பூருவந் தனிலொரு வணிக
னன்ன வன்மனைப் புறத்தா லைய மொன்று
துன்னு மங்கதிற் சிதைவுறு சிலைகளைத் தொகுத்துப்
பொன்ன தாம்படி விலைசெய்யாக் கவர்த்தனன் போலாம். (௭)

பிரச மென்மல ரணிசடைப் பிரான்றனை யொருகாற்
றரிச னஞ்செயா வவனடி தலைக்கொளு மதனு

ல்ரச ஞயிரு ஞலயச் சிலேவில செயாவுன்
டெரிசி ஞலனுன் களத்தினைச் சூழ்ந்தநிக் கொடுநோய். (அ)

வேறு.

கறைமிடற்றேன் பொருள்களினெள் ளளவுகொண்டோர் கடும்பிணியுற் றலேந்ததன்பி னிரயந்தன்னி, லுறைதவர்செங் கதிர்மதிய முள்ளகால முடனுணர்ந்து கவர்தனுமி னடுங்கியுள்ளம், பெறுபொருளி ஞற்குணித முதவியேழை பிழைபொறுத்தி யெனப்பணியி லனேயபாவ, மிறுதியுறு முணர்விலராய்க் கவர்தல்செய்யி னிருநுணிதங் கொடுத்திறைஞ்சி னேகு மன்றே. (கூ)

மறையுணர்ந்தோர் குரவர்பொருள் கவரிஞேர்ந்து மற்றதனுங் கூட்டி கொடுத்திறைஞ்சல்வேண்டு, மறிவிலராய்க்கவர்ந்திடினும்பிறர்பொருளேக் கொளினு மந்திரமீந் திடவேண்டு மல்லல்வேண்டா, ருறுமிவர்கட் கோதுபணி செய்தகன்னு முற்றபரி வர்த்தனேசெய் யிடத்துந்நக்க, முறைமையிற் கொண்டிடலாகு மின்ஞேர்தந்த முன்னமுகந் தளித்தனரோற் கோடலாகும். (க0)

எப்பவமு மெப்பிணியுந் தீருந்தெய்வ விடைமருதி ஞுருத்திரதீர்த் தத்து மூழ்கி, னிப்பொழுதே நின்மகற்கொள்ள டேருகென்ன விசைத்திட்டா னிசைத்திடலு மவனுமவ்வா, றப்பொழுதே சென்றந்தப் பதியினெய்தி யத்தீர்த்தந் தனின்மகனே யாட்டுவித்தான், செப்புவதென் னவன்மிடற்றுப் பிணியத்தீர்த்தஞ் சென்றுதோய்ந் திடுமுன்னர்ந் தீர்ந்ததன்றே. (கக)

வேறு.

பணங்கிள ரரவினீங்கும் பனிமதி யென்னவன்றே
னணங்ககன் றின்பமுற்று னேந்தறிந் தவனுமூழ்கி
மணங்குல விதழிசூடு மருதநா யகனைவந்து
வணங்கினுன் றுதிகள்கூறி மகனெடு மகிழ்ச்சி யுற்றே. (கஉ)

இன்னலெய் திடிற்றம் மைந்தர் தாமுமவ் வின்னலெய்திப்
பின்னது தீருமாறு பேணலு மதனைத் தீர்த்து
மன்னவர் மகிழத் தாமு மகிழ்தலு மியல்பாந் தந்தை
யன்னையர் தமக்கு மைந்தர் புறத்துல வாவி யன்றே. (கங)

மகிழ்விற்றன் னுலகிற் பாதி மருதவா ணனுக்கு நல்கித்
தகைமுடி சூட்டி மைந்தன் றனையவ னகருக் கேவிப்
புகழுமத் தலத்திற் பன்னுட் பொருந்தவீற் றிருந்து பின்னர்ப்
பகமொழின் மதியஞ்சூடும் பரனடி நீழல் சேர்ந்தான். (கச)

உருத்திரதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பதுமதீர்த்தச் சருக்கம்.

மருவு பின்னிசைத் திமெதி வாவியின் றென்பா
லருகி னிற்பது மதீர்த்தமென் றொன்றுள ததற்குப்
பரமன் றேவதை போற்றுதல் பணிமுகக் கணங்கள்
பிரமன் மாமுநி விருக்கமோர் பிறங்கெழில் வில்வம். (க)

ஒல்லு மன்னதிற் படிந்துகாரப் பாசமொப் பில்லா
வெல்ல முப்புயர் தானியம் விப்பிரர்க் குதவி
னல்ல னீங்கிடு மவர்க்குறு பகைவர்க ளழிவர்
மல்ல லெய்திடு திருவரும் வளர்தரும் வாணாள். (உ)

மாவ லித்தனிப் பெயருறு விரோசனன் மைந்தன்
மேவு மத்தடம் படிந்துமுன் வெம்பவ மகற்றிச்
சேவு றுங்கொடிச் சேவகன் றிருவரு ளடைந்து
தூவி னூர்த்தொலைத் தாண்டனன் சுவர்க்கமும் புவியும். (ஙு)

மருக் குலாவுமப் பதுமதீர் வாவிநீர் வடிவா
யிருக்கி னுந்தனிற் படிந்துளோ ரியற்றுவெம் பாவத்
திருக்கெ னும்விற கினுக்கொரு தீயதா மதனிற்
றெரிக்கு மெண்ணிலர் வினைகளைப் பசுமமாச் செய்தோர். (ச)

ஆண்ட நாதியாய் விளக்கமுற் றமர்ந்திடு பதுமத்
தேண்ட ரும்புகழ்க் கதைசிறி திசைத்தன மினிது
பாண்டு மன்னவன் புதல்வர்கள் பரனடி பணிந்து
காண்ட ருந்தடஞ் சமைந்திடு காதைமேற் கரைவாம். (ரு)

பதுமதீர்த்தச் சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பாண்டவதீர்த்தச்சருக்கம்.

*இருமனப்பெண் டிருமதி மயக்கிடுதண் ணறுவதுவு மிழைகுஞ் சூதுந்
திருமகணீக் கிடப்பட்டார் தொடர்பென்றுன் றோர்கூறதெளிந்தழூழாற்
றருமனுயர் வீமனருச் சுனனகுலன் சகதேவன் சாற்றுமின்னோர்
பெருதலரோ டுறுகுதிற் புவியிழந்து கரந்துறையக் காலைதன்னின். (க)

*திருக்குறள், கூஉ-ம் அதி. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு.

கண்ணணிடை மருதடைந்து கண்ணுதலைத் தொழுமினெனக் கழறக் கேளா, வண்ணமுறு மனையதலத் தடைந்துமையாள் கருணையெழு வாவி மூழ்கித், தண்ணிலவா றணிசடிலத் தனிமருத வாணனடி தாழ்ந்து போற்றி, யெண்ணருமென் துயர்தீர்ப்ப தென்றெனநின் றிசைத்தனரவ் வேலை தன்னில். (உ)

இன்னவினை விடுத்திடுமி னினியின்னுஞ் சிலபகலின் னிடனீர் சென்று, துன்னலர்க டமைத்தருமச் சமரதனிற் பொருகளத்திற் றொலைத்துப் பண்ணுண், மன்னுபுவித் தலம்புரந்து பின்னுயர்நம் பதத்தினிது மருவுவீர்க ளென்னமரு திறைவனருள் வாக்கிலகு மிருவிசும்பி னெழுந்ததன்றே. ()

அந்தமொழி செவிப்புகலு மைவர்களு மகிழ்ந்துமிலு மன்பினேத்திச், சந்தமுறு மனையபதி யிடத்தினிற்றம் பெயரினொவ்வோர் தடங்கள் செய்து, முந்துமுறுதந் நாடணைந்து பகைவர் பெருங் குலமுழுது முருக்கியைய, நந்தலில்பே ருவகையொடும் புரந்ததன்பி னண்ணலடி நண்ணினார்கள்.

பதுமமெனுந் தீர்த்தமதன் றென்புறத்தி லவர்தீர்த்தம் பரத்துவாசர்
முதுதவத்துச் சதுகர்ணர் கௌதமர்பாண் டவிபயிலர் முனிவர்பாவ
விதமுறுமா வாமலக மால்வேம்பு தருதெய்வ மீசனந்தி
கதமுறுவேற் குகன்பிருங்கி சண்டேச னின்னவரோ காப்பினோரும். (ரு)

மேதகுமத் தடங்களிடைப் படிந்துபுனற் குடங்கவிகை விசிறியாடை பாதுகையந் தணர்க்குதவி லெனவகைச்செல் வமுமுளவாம் பகைமை தீரு, மேகமுறு பிணிதவிரு மிங்ஙனமத் தடமூழ்கி யின்பமுற்றோர் பூதலத்தி லெண்ணிலர்மே லிந்திரதீர்த் தச்சிறப்புப் புகறல்செய்வாம். (சு)

பாண்டவதீர்த்தச் சருக்கமுற்றும்.

---

உ

சிவமயம

# இந்திரதீர்த்தச்சருக்கம்

கொந்து றும்மலர்ச் சடையவன் குணதிசை யிடத்தி
லிந்தி ரன்முனஞ் சமைத்திடு தீர்த்தமொன் றிலங்கு
மந்த மன்னனே தேவதை யாமவன் முனிவன்
இந்து சூடிறை காப்பவன் முருமுள் ளிலவு. (க)

ஓது மற்றதிற் படிந்திரும் புடனொளிர் வெள்ளி
மேதி யின்சுவைப் பால்கனி வெள்ளிலை கமுகம்
வேதி யர்க்கினி தளித்திடின் வெவ்வினை யதனோ
டேதஞ் செய்பிணி யகன்றிடு மின்பமே லெய்தும். (உ)

ஆற்று மக்கினிட் டோமத்தி னரும்பல னடையு
மேற்றி கழ்ந்திடு மதிற்படிந் தல்லநோய் விடுத்துச்
சாற்றி டின்பமு மகிமையுஞ் சார்ந்தன ரநேகர்
தோற்ற வாமுத லியதவிர் தூயமா தவத்தீர். (௩)

என்று சூதமா முனிவர னிசைத்தலு முனிவர்
வென்றி வச்சிரத் தவனெது வேண்டியத் தலத்திற்
சென்று ரைத்திடு தீர்த்தமாங் கியற்றினன் றெரிய
வின்றெ மக்குரை செய்திடு மெனவவ னிசைக்கும். (௪)

பூச லிற்பொரு களத்திடைத் தனதுயிர் போன்ற
தீச னரிடத் தறுவா மேற்றிடு திறலோன்
பேசு மன்னவன் வலனெனும் பெயரினு னெதிர்த்து
வாச வன்றனோ டமர்செய மற்றவன் றோற்று. (௫)

இவனை வஞ்சகத் தலைத்திட வேண்டுமென் றெண்ணி
யவனை யுற்றுநீ பொருதிடு மாற்றல்கண் டமரி
லுவகை யுற்றன மிதவர முனக்களித் திடுவாங்
குவவு மால்வரை நேரினும் வேண்டுவ கோடி. (௬)

என்ன வோதலு மவனகைத் தெனக்கெதிர் தோற்ற
வுன்னி டத்தினிற் பெறுவதோ வுளக்கியான் றருவன்
மன்ன கேளென நாடொறு மகமியற் றிடுகே
னன்ன தற்குறு பசுவுரய் வருகென வறைந்தான். (௭)

ஈவ தேபெரி தெனவல னெண்ணிநற் பசுவாய்த்
தாவி லாதவம் மகப்புரி சாலையந் தடைந்தான்
மேவி யிந்திரன் சுருதிசொல் விதிமுறை வதைத்துத்
தேவர் தங்களுக் கூட்டிமேற் செய்தனன் வேள்வி. (௮)

வஞ்ச னைத்திறத் தவன்றனை வதைத்திடு பவமும்
வெஞ்சி னப்படைப் பகன்றனை வீட்டிய பவமும்
நஞ்செ னக்கொதித் தலைத்திட நாடொறு மலைவுற்
றஞ்சி யித்துயர்க் கென்னிழைத் திடுவதென் றாய்ந்து. (௯)

மன்னு சீரிடை மருதடைந் துமையருள் வாவி
தன்னின் மூழ்கிநீண் மருதநன் னிழலுறை தாணு
பொன்ன டித்துணை பணிந்துதன் பெயர்கொடு புகலத்
துன்னு சீர்த்தட மமைத்தரு வினைகளைத் துடைத்தான். (௧௦)

அனைய சோதியை யருச்சனை புரிந்தவ னருளு
மனைய மால்வரங் களுங்கொடு பொன்னுல கடைவா

னினைய வாவியிற் படிந்திவை வேதியர்க் கீவோ
ரினைய னீக்கிமற் றிவைபெறு கெனவிசைத் தகன்றான். (௧௧)

கந்த நாண்மலர் மலிதரு கற்பக நிழல்வா
ழிந்தி ரன்றனித் தீர்த்தமான் மியஞ்சிறி திசைத்தாம்
வெந்த ழற்பெருங் கடவுடன் பெயர்கொடு விளங்குஞ்
சந்த முற்றிடு வாவியின் பெருமைசாற் றிடுவாம். (௧௨)

இந்திரதீர்த்தச்சருக்கமுற்றும்.

---

உ

சிவமயம்.

# அக்கினிதீர்த்தச்சருக்கம்.

சாலு மிந்திர வாவியின் சார்ந்திடு தென்பாற்
கோலி ரண்டட ஜென்றுமிழ் செப்பமையிற் சூலவுற்
சூல காதமொன் றுருதடந் தோன்றிடு மதன்றன்
பால னக்கினி சங்கரன் பகர்ந்திடு தெய்வம். (௧)

மயன்மு தற்பகை மாற்றிடு மாதவன் கபிலன்
பயிலு றுந்தரு செல்லியத் தடத்தினிற் படிந்து
தயிர்நெய் பாற்பசு மறையவர் தமக்களிந் தனரோ
லுயிர்வ தைத்திடும் பாதக மொழிந்திடுங் கணத்தில். (௨)

ஆதி யோர்பகல் வயிரவ னாகிய கடவு
ளோது மங்கர் காவலி னுற்றுலா வருவான்
சோதி முத்தலைக் கைப்படைச் சூலமூ லத்தைப்
பூத லத்தவ னூட்டிமே லெடுத்தனன் போலும். (௩)

எடுத்த பள்ளமோர் வாவியா யிலங்கிய தன்றேன்
பிடித்த சூலமங் கமைத்ததாற் பேசுமந் நாம
மடுத்த தப்பெருந் தீர்த்தமா வதனிடைத் தோய்ந்து
தொடுத்த பாவநீத் தலகிலர் தூயரா கினரால். (௪)

பாண்டு வின்மகன் பற்குனன் பரிவுட னுரவு
காண்ட வப்பெரு வனத்தினைப் புசித்திடு காலை
யாண்டி ருந்தபல் லுயிர்கள்வெந் தவிதரவெம் பாவம்
பூண்ட *பாவகன் மற்றது போக்கிடக் கருதி. (௫)

---

*பாவகன்=அக்கினிதேவன், சுத்தப்படுத்துவோன் எனபது பொருள். [பூ—சுத்தப்படுத்து.]

வளர்ந்த ரும்புக ழுந்தல மரிஇவை ரவன்செய்
குளர்ந்த னிற்படிந் தப்பெருங் கொலைப்பவ மகற்றி
யுளங்கொ ளோகையி னத்தட மொளிபெறப் புதுக்கிக்
களங்கொள் கண்டனைப் பணிந்துதன் கவினுலகடைந்தான். (௬)

அனைய னோர்பெறப் புதுக்கலா லக்கினி தீர்த்த
மெனவ தற்கொரு நாமமே யெய்திய திப்பா
லினம லர்க்குலம் பொலிதரு மியமதீர்த் தத்தின்
கனமு றுந்தனி மான்மியங் கட்டுரைத் திடுவாம். (௭)

அக்கினிதீர்த்தச்சருக்க முற்றும்.

௰

சிவமயம்.

# இயமதீர்த்தச்சருக்கம்.

பாவக தீர்த்த மேல்பாற் பகழிபேழ் படுவா ரத்தின்
மேவுறு மியம தீர்த்தம் விளம்பிய மன்றவத் தோன்
தேவதை யகோரமூர்த்தி பாதிரி திகழுந் தாரு
காவல்செய் திடுவா ரங்க ளிசிரிடர் கணங்களாகும். (௧)

திருத்தரு மதனின்மூழ்கித் திலமுட னிரும்பு செம்பொன்
பருத்திகம் பளங்கார் மேதி பகடிவை பனவர் தங்கட்
கருத்தியி னுதவுவோர்கட் கறைதரு மியமன் றன்னால்
வருத்தமீ தின்றுமீண்டும் வளர்ந்திடு மவர்தம் வாழுநாள். (௨)

வேறு.

துன்பி ழைத்திடு குட்டநோய் பித்தநோய் சூலை
யென்பு ருக்கிடு மேகநோயாதிய விரியு
மின்பு கல்விசெல் வம்புக ழெழினனி யெய்தும்
வன்ப கைத்திறம் விளைப்பவர் வணங்குவர் வந்து. (௩)

கயலை நேர்விழி யுமைதவம் புரிந்திடு காலை
யியலு மத்தவச் சாலைதன் றாதரோ டியமன்
பயிலுங் காவல்செய் திட்டநாட் பகருமவ் வாவி
வியலுறச் சமைத் தாங்கினி திருந்தனன் மேவி. (௪)

(வேறு)

அத்தகைய நெடுந்தீர்த்தத் தென்கரையிற் சிலபகல்பின் னகன்றபின்னர்
முத்தமிழ்த்தென் மலயமுனி மருதநிழ லிடத்தொளிரு மூர்த்திதன்னைப்
பத்திவலை யிடைப்படுமெம் பரசிவனை யன்பினொடும் பணிவுற்றேத்தி
மெய்த்தவர்சூழ்ந் திலங்கிடநீ டருந்தவஞ்செய் திடுவதற்கு மேவுற்றானால்.

வினையகற்று வெண்ணீறுங் கண்மணியு முடன்முழுதும் விளங்கத் தாங்கிச், சினவியெழு மைம்புலனு முள்ளடக்கித் திரிமலமுஞ் சிதைந்து நீடு, கனமுதவு தாமரையா தனத்திருந்தா னுடலுறக்கங் கடிந்து நோக்கந், தனைமுகிழ்த்தல் விழித்தலுறா வொருதிறத்து நாசிநுனி சாரச்செய்து. (சு)

இடையினொடு பிங்கலையி னிடையினுங்கால் வரவுபோக் கிலங்கிடாது, நடுவினுறு சுழுமுனையிற் றம்பனஞ்செய் துயிர்க்குயிராய் நயந்து வைகுஞ், சுடரினைத்தன் மனத்திருத்தி வழிபடச்சில் பகலாங்குத்தோற்றத்தோடு, முடிவுமிலாக் கடவுளெதிர் தோற்றினனகோரமா மூர்த்தியாகி.

அலகிலுருத் தபனர்களோ ரிடத்தெழுந்த தெனத்தோன்றிடமலன் வேணி, நிலவுமிழு மிளம்பிறையு மலர்முகமும் விழிமூன்று நிகழ்செவ்வாயு, நலமருவு பிறவெழிலுங் கண்டெழுந்து மகிழ்வினொடு நடித்து முன்னர்ப், பலமுறைவந் தனஞ்செய்து கடல்குடித்த மலயமுனி பரவலுற்றான். (அ)

அணையரவ முடையோனு மரவிந்தக் கண்ணோனு மறியொணாத துணைமலர்ச்சே வடிதனியேன் காணவெழுந் தருள்புரிந்த சோதிபோற்றி, யிணையிலிபொன் விசழிபுனை வேணியனீ ளிடைமருதி னெந்தைபோற்றி, பணைமுலைமின் கொடிமருவு மிடப்பாக விடைப்பாக பரமபோற்றி. (கூ)

என்றுதுதித் திடவன்ற னருந்தவமு மிருந்துதியு மெமதுநெஞ்சந், நன்றிமிகு மகிழ்வுறச்செய் தனவுனக்கு வேண்டுவரஞ் சொல்கவென்னக், குன்றுதனை வளைந்தபிரா னிசைத்தனனம் முனிதாழ்ந்து குலவுமின்பா, லொன்றலுறு முயர்முத்தி வேண்டுமென வுரைத்திட்டா னுமைக்குமீசன்.

வேறு.

தென்றமிழ் முனிவமுத்தி வேண்டுமேற் றெரிக்குமன்ன
துன்றனக் கரியதன்று மயேந்திர மென்னுமோங்கல்
சென்றவ ணுறைதிநாமுஞ் சிலபகல்கழிந்திட் டந்தக்
குன்றிடை யணைந்துகாட்சி கொடுத்தஃதுந் தருதுமென்றான். (கக)

பெரிதுள மகிழ்வுற்றந்தப் பிறங்கல்சென் றுறைந்தானன்றோ
னரியயற் கரியவண்ண லனையபே ருருவத்தோடு
தெரியுற வின்னுமாங்கே திகழுற வுறையுநீடு
விரிதரு முலகினோர்க்கு வேண்டிய வரங்களீவான். (கஉ)

அத்தடம் படிவுற்றந்த மூர்த்தியை யருச்சித்தோரு
முய்த்திடு பூசையாற்றற் குரியன வுதவி னோரும்
பத்தியிற் பணிந்திட்டோரும் பாரினு மினிதுவாழ்ந்து
சித்தரா யவன்றாணீழ லீடுவ ரீதுவாய்மை. (கங)

வேறு.

தருமனுக் கியதனித் தடத்தின் மேன்மையும்
பரசிவ னுண்டினி திலங்கு பான்மையு
மொருவகை பேசினு முமக்கு நாமினி
நிருதிதீர்த் தத்துறு நிகழ்ச்சி கூறுவாம். (சச)

இயமதீர்த்தச்சருக்க முற்றும்.

---

உ
சிவமயம்.

# நிருதிதீர்த்தச்சருக்கம்.

இயமதீர்த் தத்தினுக் கிலங்கு மேற்றிசை
வயினிரண் டோடொரு வாளி வீழிடைப்
பயிலுறு நிருதியின் றீர்த்தம் பாங்குறும்
மயலறு மாதவன் வசிட்ட னென்பவன். (க)

சேத்திர நாதல்வளர் நிமலன் றேவதை
கூர்த்திடு நிருதியே குலவு மன்னதைக்
காத்திடு நீள்கருங் காலி யென்றிசை
சேர்த்திபெற் றிடுதரு திகழு மாயிடை. (உ)

மேயதின் மூழ்கிமேல் விளங்கு பூசினிக்
காயுளுந் தெண்ணெயெட் கலந்த போனகந்
தூயவே தியர்க்கிடிற் சுரமுன் னாகிய
நோயகன் றிடுமொரு நொடிப்ப தத்தினே, (ங)

அரக்கரி னலகையி னணுகு மின்னன்மே
லொருக்குறு மின்பமே நீடு நாடொறுந்
தருக்குறு மத்தடந் தன்னின் மூழ்கிமுன்
கருக்குநோய் தவிர்ந்துளங் களித்து ளார்பலர். (ச)

தரணியி லெளியடைக் காக்கத் தானவ
ரரசனத் தடஞ்சமைத் ததற்கு முன்னிசை
வானுமீந் திட்டனன் மகிழ்ந்து மற்றினி
வருணதீர்த் தம்பெறு வளமை யோதுவாம். (ரு)

நிருதிதீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்

# வருணதீர்த்தச்சருக்கம்.

மருத நாயகன் றனக்குமேற் றிசையினில் வாளி
யொருப தைந்துவீ ழெல்லையி னுறையுமோர் தீர்த்தம்
வருண னுக்கிய தஃதவன் பெயரினால் வயங்கு
மிருடி திண்பரத் துவாசனு மிசைதரு வருளம். (க)

தீர்த்த பாலனைங் கரத்தினேன் றெரிக்குமெய் புயிர்க்குஞ்
சாத்தி யப்பொரு ளாயுறு சத்தியோ சாத
மூர்த்தி தேவதை மற்றதின் மூழ்கிவெள் ளடைகா
பேர்த்து ரங்கமே லுதவிடிற் கொடுவினை யேகும். (உ)

பொன்னி ரும்பிர சதங்களிற் பொலிந்திரு விசும்பு
தன்னி டைத்திரி திரிபுரங் களினுறு தகுவர்
முன்ன வன்றரத் தாம்பெறு வரத்துறு மொய்ம்பாற்
றன்னு வானவர்க் கருதினந் துயரமே விளைத்தார். (ங)

வான நாடவ ரவர்செயுந் துயரினால் வருந்தி
மாநி லம்புக ழிடைமரு தெனும்பதி மருவி
மேன லம்பெறக் காகமூழ் கியதட மேவி
நானஞ் செய்துமை யருளினு ரத்தினும் படிந்து. (ச)

பொன்னி சூழிடை மருதிறை யவனடி போற்றி
யன்ன வன்மல ரடியையே யகத்தினிற் குறியாச்
சொன்ன வாருணத் தடத்தினுந் தோய்ந்ததன் கரைமேற்
பன்னு மெய்நடுக் குற்றிடப் பரிந்தன ரிருந்தார். (ரு)

முந்து சத்தியோ சாதமா மூர்த்தியா யிறையோன்
வந்து நின்றெதி ரவரைநீ ரஞ்சன்மின் வலிசெ
யந்த வன்கணர்க் கழிவுநா ளடுத்ததா மென்னச்
சிந்தை தன்னொடு மெய்யுறு நடுக்கமுந் தீர்த்து. (சு)

கேச வன்றிரி புரத்துறு கேடர்பாற் கிடைத்தாண்
டீசன் மாலய னிறைவனொன் றியம்பல்பொய் யென்றவ்
வாசை நீங்கிடப் பலபல மாயஞ்செய் தவர்செய்
பூசை யுஞ்சிவ பத்தியும் போக்கிமுன் வந்து. (எ)

ஈச நின்பதம் விடுத்திலர் மூவர்மற் றியாரு
நீசராயினர் திரிபுரத் திடையென நிகழ்த்த
வாசு கிப்பெரும் பணியினை நாணென மாட்டித்
தேசு மிக்கபொன் மேருவைச் சிலையதாக் கோட்டி. (௯)

மாய னைக்கணை யாக்கியக் கைக்கொடு மதியோ
டேய செங்கதிர் திகிரியா யிசைமறை பரியாத்
தூய நான்முகன் வலவனுத் துன்றுமே தினியா
மேய தேரினின் றொருதனிச் சிறுநகை விளைத்து. (௧0)

அந்த மென்னகை யெழுந்ததீப் பொறிகளி னங்கு
மூந்து முப்புரந் தீயவு மொழியுமுத் தவரும்
வந்து தன்னடி வணங்கவுஞ் செய்தபின் வானோர்
சுந்த ரத்தம னியநகர் துன்னவுஞ் செய்தான். (௧௧)

தாரி லங்கணி முடிச்சுரர் தனிமுதற் போற்றிப்
பாரி னிமித் தலத்திடைப் பகர்புனற் கிறைசெய்
நீரின் மூழ்கினு மிகலினோர் நெருப்புமூழ் கினவொன்
றேறி னேங்கதைப் புகழ்ந்தத மிருக்கையெய் தினரால். (௧௨)

கடுக்க வின்பெறு கந்தரக் கண்ணுத லிமையோ
ரிடுக்க ணீக்கிய திறத்தினு மின்னுமத் தலத்தி
னடுக்குந் தீர்த்தவ னெனச்சொலு நாமமேற் கொண்டு
வடுக்கண் மாதினோ டமர்ந்திடும் வணங்கவு முலகும். (௧௩)

தருண வின்மதி மிலைந்திடை மருதுறை தலைவன்
கருணை யுற்றருள் வரம்பெறு நெஞ்சகங் களித்து
வருண னாக்கிய வாவியின் மான்மிய மிதுமே
லருண வாகனன் றீர்த்தமான் மியமினி தறைவாம். (௧௪)

வருணதீர்த்தச்சருக்க முற்றும்.

௨

சிவமயம்.

# வாயுதீர்த்தச்சருக்கம்.

மேய வாருணத் தடவட மேற்றிசை யிடத்தோர்
சாய மயவிழு சேய்மையிற் றயங்குமோர் தீர்த்தம்
வாயு தீர்த்தமென் றதற்கிசை வாயுவே தெய்வஞ்
சேய மதப்புரந் திமுனி திறங்கொள்கண் ணுவனும் (௧)

கேச ரத்தனித் தருவொன்று கெழுமலர் கொண்டு
வாசஞ் செய்திடு மாவயின் மற்றதின் மூழ்கி
யாசில் கன்னிகை கபிலைபொ னந்தணர்க் குதவிற்
பேசும் வாயுநோ யகலுமே லின்பமும் பெருகும். (௨)

ஒளிரு மத்தடந் தனிற்படிந் துயர்கதி யடைந்தோ
ரளவி லாரவர் தமிலொரு வன்றனை யறைதுங்
கிளரும் விப்பிர குலத்தினோன் கிருகலப் பெயரோன்
களவு கைதவம் படிறிவை யளவில கற்றோன். (௩)

அந்த வூளர்பாற் பயிலுறு னருமறை யறையான்
மந்தி ரப்பெரு மயலினும் வடிவகிர் நெடுங்கட்
கந்த மென்மல ரோதியர் காமவே லையினுஞ்
சந்த தப்படி மனத்தொடு சரிப்பவ னொருவன். (௪)

வந்து சத்தமா முனித்தலத் திடைநளி மதியி
லிந்து வாரநா ளிரவினி லீசன்மீ திலங்குஞ்
சந்த நீள்பணி கவர்ந்திடச் சார்ந்தது தெரிவா
னந்து தீபத்தைத் தூண்டிமேற் கொண்டன னடந்தான். (௫)

நடக்கும் போதினி லியமகிங் கரர்சிலர் நண்ணி
யடுத்தி டங்கொரு பணியெயிற் றமர்தருங் கொடிய
விடத்த வன்றனைக் கொண்டுபோய் விளங்குகூற் றுவன்பால்
விடுத்து நின்றன ரன்னவ னுய்ந்திது விளம்பும். (௬)

தராத லத்திடைப் பனவநீ யிழைத்தபா தகத்தாற்
கிராத னுவுதித் தெழுமுனித் தலத்தினிற் கிடைத்தங்
கிராவி லிந்துநா ளீசன்முன் னிருந்திடு சுடர்வில்
விராவ நீட்டலா லிடைமரு தெனும்பதி மேவி. (௭)

அனில னுக்கியவ் வாவியிற் படிந்துமற் றனைய
புனித வாவியிற் படிந்திடு புண்ணிய வசத்தாற்
பனிம திச்சடை நுதல்விழிப் பரம்பொரு ளுலகத்
தினிதி ருஞ்சுக மெய்துவா னிறத்திபோ வென்றான். (௮)

அவனு மத்திறற் கூற்றுவ னறைந்தவா றீண்டுச்
சவா னுவுதித் திடைமரு தெனும்பதி சார்ந்து
தவல ரும்புகழ் மருத்தெழிற் றடத்தினிற் றோய்ந்து
சிவப ரன்றனி யுலகிடைச் சென்றுவீற் றிருந்தான். (௯)

தளமி குந்திடு மலர்பொலி * சமீரண தீர்த்த
வளமை மற்றிஃ தாமினி மகிழ்வுறு தவத்தீர்
களமி டற்றவன் றுணைவனுங் கட்டுரைத் திடுதென்
னளகை மன்னவ னமைத்ததீர்த் தப்புக ழுறைவாம். (௪௦)

வாயுதீர்த்தச்சருக்க முற்றும்.



உ

சிவமயம்.

# குபேரதீர்த்தச் சருக்கம்.

தீர்க்க முற்றிடும் வாயுவின் றீர்த்தமென் றதற்கே
கூர்க்க டுங்கணை யைந்துசெல் சேய்மையிற் குணபாற்
றூர்க்க வின்முடி நிதிபதி சமைத்திடு தீர்த்த
மார்க்க டேயனு முனிவரன் மற்றதற் கிருடி. (௧)

கொண்ட புட்பக வூர்தியே குலவதின் றெய்வங்
கண்டை யுற்றகண் டகர்ண னன்னதைக் காப்போன்
வண்டு ணுமலர்ச் சண்பக மதிலுறு விருக்க
மண்டு வெள்வளை யுலவுமவ் வாவியின் மூழ்கி. (௨)

வேத மாகம மாதிப வுணர்ந்தவிப் பிரர்க்கு
மோத கங்கழை சருக்கரை மொழிதரு சுகந்தங்
கோது மைக்குலங் கொடுத்திடிற் குலவுமன் னவர்க
ளோது தீவினை குறைந்திடு முயர்ந்திடுஞ் செல்வம். (௩)

அத்த டத்தினே யமைத்துவெவ் வினைதவி ரருத்த
னித்தி றப்பெருஞ் செல்வமுற் றிடவிடை மருதி
னித்த னைப்பணிந் துறுவர மேற்றநன் னீர்தோய்
மெய்த்த வர்க்குத வெனவதற் குதவினன் மேனாள். (௪)

மேவு மத்தடந் தனிற்படிந் தித்திறம் வெய்ய
பாவ நீக்கிநற் செல்வமேற் பற்றின ரநேகர்
சேவு கைத்திடு சானனுந் தேவனு ரமைத்த
வாவி யின்றனிச் சிறப்பினி வழுத்துது மன்றோ.

குபேரதீர்த்தச்சருக்க முற்றும். (௫)

---

*சமீரணன் = வாயு. நன்றாய்ச்செல்கின்றவன் என்பது பொருள்,
[சம் = நன்றாக, ஈர் = போ, செல்.]

சிவமயம்.

# ஈசானதீர்த்தச்சருக்கம்.

இயக்கர் நாயக னமைத்திடவ் விலஞ்சியின் கீழ்பால்
வயக்க டுங்கணை யிரண்டிலீ சானன்முன் வகுத்த
வியக்கு றுந்தனிப் பொற்றட மேவுறு மிருடி
மயக்கின் மாதவ வசிட்டனும் வார்தரு விளவே. (௧)

மாணி பத்திர னென்பவன் மற்றதைப் புரப்போன்
றாணு வென்றுல கிசைத்திடு சங்கரன் றெய்வங்
காண விற்படிந் துருத்திரக் கண்மணி கலைகள்
சேண வித்திடின் மகவுறும் ஞானமுஞ் சேரும். (௨)

மேலை யன்னதிற் படிந்தெழில் மிருகண்டு மைந்தன்
சூல பாணியை யனையபொற் பதியிடைத் தொழுது
கால னென்பவன் றனைப்புகழ்க் கடவையில் வென்று
சால வின்புற வாழுநா ளெய்தினன் றனித்து. (௩)

உரிய வன்பினம் மறையவ னிதிற்படிந் துலகிற்
பெரிது வாழ்பக லெய்தின னென்பது பெரியோ
ரரிய ஞானமொன் றெய்திடு மௌனச்சொலி னதனாற்
கரிய கந்தரன் றிருவருள் கலந்திடு மன்றே. (௪)

இன்னு மத்தடந் தனிற்படிந் திடையரு மிறையோன்
பொன்ன டித்துணை பணிந்தரு ளெய்தியிப் புடவி
தன்னி னைப்பல யுகமுறச் சித்திசார்ந் தவரு
மன்னு வீடுபெற் றவர்களும் வரையில ரன்றே. (௫)

ஈச னுற்றிய வாவியின் மான்மிய மிதுவாம்
யாசி லந்தணி ரினியவன் மலரடி வணங்கி
வாசு தேவனென் றுரைத்திடு மாதவ னுரைத்த
தேசு மிக்கதீர்த் தக்கதை சிறிதெடுத் திசைப்பாம். (௬)

ஈசானதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கிருஷ்ணகூபச்சருக்கம்.

ஆல யத்தினி லீசதிக் கதனிடைக் கண்ணன்
மேலை யத்தலத் தெதிர்ந்தநாள் விளைத்ததோர் தீர்த்தங்
கோல முற்றினி திலகிடுங் கூபநீ டுருவாய்ப்
பாலி னட்டமி தனிலதிற் படிதலுத் தமமால். (௧)

தரிக்கு மன்னதிற் பரிவொடு தானமுன் னியற்றிற்
றெரிக்கும் வெவ்வினைக் கணத்துட னிரணமுந் தீரும்
வரிக்கண் மாதுறும் மகவுறு மதியிள நிலவு
விரிக்கு மின்சடைத் தனிமுதல் கருணையு மேவும். (௨)

தான வர்க்கிறை யாகிய மாவலி தன்பாற்
றான மூன்றடி தருகெனத் தகையரி வேள்வித்
தான மெய்திநின் றிரந்திடப் * பார்க்கவன் றனித்துத்
தான வற்கியற் குரவனாந் தன்மையாற் சார்ந்து. (௩)

மேவு வஞ்சமீ தெனக்கொடா வகையெதிர் விலக்க
மாவ லிப்பெயர் மானவன் வந்திரந் தவர்கட்
கீவ தேபெரி தெனவுரைத் தளிப்பதற் கிசையக்
† காவி யன்பினர் மேனெறி யாதெனக் கருதி. (௪)

பொழித ரும்புனற் கமண்டலச் சிறுதுளை புகுந்துள்
வழிய டைத்தனன் வாமனன் மற்றதை யறிந்தவ்
வுழியி னோர்பசுந் தருப்பையிற் குத்திட வொளிபோன்
விழியி னொன்றிடைப் பட்டது வியன்மணி சிதற. (௫)

ஆங்க வன்றுய ரொடுமுகம் பெயர்த்தன னதனிற்
றாங்கு தண்புனல் விடுத்தவன் சொன்னவா றளித்தான்
வாங்கி மாயவன் றலைக்கொள மலர்ப்பதங் கொடுத்தா
னீங்கு வெள்ளியி னேகநேத் திரத்தொடு நின்றான். (௬)

ஈதல் வேண்டும்வந் திரந்தவர்க் கிசைந்தன விலையே
லோதல் வேண்டுமற் றொருவருக் குதவுமா றின்றேல்
யாது மோதுறா திருந்திட வேண்டுமன் றீதல்
பேத முற்றிடச் செய்பவர் பிணியுறல் வியப்போ. (௭)

* பார்க்கவன்=சுக்கிரன். பிருகுவின் சந்ததியிற் பிறந்தோன்.

† காவியன்=சுக்கிரன், கவினது புத்திரன்.

கொடுக்கு மானவ னின்பமேற் கூடிடு முன்ன
ரிடுக்க ணெய்தினு மதனொடு புகழுமொன் றெய்துந்
தடுக்கி னார்க்கொரு புன்கணுஞ் சாற்றிடு வசையு
மடுக்கு மென்பதம் மாவலி கவிகள்பா லறிந்தாம். (௮)

நின்ற வெள்ளிபொன் னிடைமரு தெனும்பதி நேர்ந்து
துன்று சீருறக் கூவனீர் தோய்ந்துடன் பெற்றான்
சென்ற கண்மணி பிறர்க்கிவ னீதலைச் சிதைத்தோ
னென்று காட்டிலைச் சினையின்முன் போலவே யிலங்கும். (௯)

பாவு மோகையி னுமையொடு மருதுறு பாங்கின்
மேவு சோதியைத் தன்னிரு விழியினு நோக்கித்
தூவி யொண்மலர் பணிந்தெதிர் துதிபல விசைத்துத்
தேவர் தங்களுக் கின்னல்செய் தீவினை தீர்ந்து. (௧௦)

தன தெழிற்றனி யுலகிடைச் சார்ந்தனன் றயங்கு
மனைய தீர்த்தமான் மியஞ்சொலற் கநேகமுண் டின்னுஞ்
சினவு மால்விடைத் தாணுவின் றிருவிழி யமைத்த
கனக தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத் திடுவாம். (௧௧)

கிருஷ்ண கூபச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# கனகதீர்த்தச் சருக்கம்.

மாக வின்மதி சூடிகண் வந்தபொற் றீர்த்தங்
காக தீர்த்தமென் றுயதூ காகமுன் மூழ்கி
யேக நாயகன் றிருவரு ளெய்திய துறைக்கிற்
பாகு றன்னதை நோக்கிடிற் பழவினை பறியும். (௧)

அங்கை யாலதைத் தொடின்வினை யாவையு மகலுந்
தங்கி டன்னதி லொருதுளி தலைமிசைத் தெளிப்பிற்
பொங்கு வேள்வியைந் திரட்டியா யிரப்பலன் பொருந்து
மங்கு வெம்பிணி தொலைவுறு மருவுறுஞ் செல்வம். (௨)

துங்க முற்றிடு மதனிடைத் தோய்ந்திடு மவர்க
ளிங்கி தம்பெறக் குறித்தவை யாவையு மெய்தித்
திங்கள் சூடிய சிவனுருப் பெறுவர்மேற் றெரிக்கும்
பங்கு னிக்கண்முன் னாதிற் படிந்திடல் விசேடம். (௩)

கொடிய தாகிய வொருகொடி குலவதி னெய்திப்
படிதல் செய்துபொன் னுருவதாய்ப் பரனுரு வாகி
நெடிய பொற்குவட் டிரசத நிலவுவெண் கயிலை
குடிபு குந்தனும் பிறர்சிலர் கொடுமைதீர்ந் ததுவும். (௪)

முன்னர் நீவிர்கள் குணர்ந்திட மொழிதலுற் றனமா
லின்னு மன்னதி லெண்ணிலர் படிந்துநீ டின்பந்
துன்னி னோர்களச் செய்கையுந் தோன்றுழி யறைதும்
பின்ன ரீண்டினிக் கங்கையின் பெருமைபே சிடுவாம். (௫)

கனகதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

## கங்காகூபச் சருக்கம்.

கந்தவே ளருளாற் கூபம தாகிக் கண்ணுதற் கேசதிக் கிலங்குஞ்
சுந்தரத் தீர்த்த மதனிடை யிறையோ னருளினாற் றூயநீர்க் கங்கை
சந்தத முறையு மதனைநோக் கிடினுந் தடங்கையிற் பரிசனஞ் செயினு
மூந்திய கோடி கொடுவினை மூழ்கு மூழ்கிடின் வினையெலா முடியும். (௧)

மருவிடு மதனின் மூழ்கியந் தணர்க்கு வளர்சிவ லிங்கநீள் சிவிகை
யிரதம் வெண்கவிகை யிரசதங் கனக மிசைந்தன வுதவின னொன்னிற்
பரவுமிவ் வுலகிற் பகைகளை யொடுக்கிப் பகருமெவ் வின்பமு மணைந்து
விரிபசுங் கதிர்வெண் பிறைகொள்செஞ் சடில விமலனெண் பதமுமே
வுறுவார். (௨)

உத்தம மாகு மனையதீர்த் தத்தி னுத்தர திக்கினி லுறையு
மத்தநா ரீசன் விபண்டக முனிவ னனலிதன் றிசையுறுங் குணபான்
முத்தலைப் படைக்கை வயிரவ னுறையு மொழிதரு நிருதிதன் றிசையின்
மெய்த்தகைப் பிரமன் காவலாய் வதியும் மேற்றிசை யிடைமருதிலங்கும்.

சாற்றதன் மருங்கு பிதிர்களுக் கொருகாற் றருப்பண மிழைத்திடி
னதைத்தொண், ணூற்றறு தினத்துங் காசியென் றினிது நுவல்பெரும்
பதிக்கணாற் றியதா, யேற்றுள மகிழ்வ ரனையரன் னதன்பா லிருந்துநூற்
றைந்தெழுத் தோதிற், பாற்றிகழ் பதிக்க ணாயிரங் கோடி பரிந்திசைத்
திடுபலன் மேவும். (௪)

அத்தகைத் தீர்த்தந் தனையெடுத் தாடி யலகிலர் கொடுவினை தொலை
த்து, நித்தனீ டருளு மடைந்தன ரனைய நிகழ்ச்சியு மளவினிற் சொலு
து, மெய்த்தவத் தீரிங் குறுதியாய்க் கேண்மின் விளங்கிடு கருடதீர்த் தா
திப், பத்துவண் டீர்த்தத் திடங்களுஞ் சிறப்பும் பகருவன் றொகைப்பட
வினிது. கங்காகூபச்சருக்க முற்றும். (௫)

சிவமயம்.

# கருடதீர்த்தாதிச் சருக்கம்.

இரு டருங்கள மருதநா யகன்றனக் கெதிரோ
மரு டவிர்த்தினி தொருநடஞ் செய்மையின் மன்னுந்
தெரு டருந்தனி யத்தலத் தநாதியாய்த் திகழுங்
கருட னன்னதின் மூழ்கிமேற் கருதிய தடைந்தான். (க)

பின்னு மெண்ணிலர் மூழ்கிமுன் பெரிதுறு நோய்க
ளின்னல் யாவையு நீக்கிமே லின்பநீ டுற்றா
ரன்ன வன்பெருஞ் சிறப்பினை லவன்பெய ரடைந்த
தென்ன டைந்தனன் மூழ்கிமற் றவனெனி னிசைப்பாம். (உ)

தக்க னின்றருள் புதல்வியொ ரெண்ணிலர் தம்முண்
மிக்க காசிபன் மணந்திடு விநதை கத்துருவாந்
தொக்க பேருறு மிருவருந் துலங்குமோ ரிடத்தி
லொக்க வுற்றிருந் துலகியல் பேசிடுங் காலை. (ங)

கனக நாட்டின னிவுளிவால் வெளிதெனக் கவின்கொள்
விநதை யோர்ந்தன ளுரைத்திட மேலது கரிய
தென வுரைத்தனள் கத்துரு விதற்கு மாறுகி
னினிதி னேவல்செய் திடுவதீண் டிலைத்தவ ரென்றார். (ச)

அந்த வஞ்சினம் புதல்வராம் பணிகளுக் கறைந்தாண்
முந்து கத்துரு பணிகளி னொன்றுபோய் முடுகிச்
சிந்தி வல்விட மன்னதைக் கரியதாச் செய்து
வந்த தன்னவள் விநதையைக் வருதிகா ணென்றாள். (ரு)

சென்று பார்த்தனர் கரியதா யிருந்தது திகைத்து
நின்ற வாணுதல் விநதையை மற்றவ ணீமேற்
றுன்று மேவல்செய் திடுகெனச் சொல்லின ளிசைவுற்
றன்று தொட்டவட் கேவல்செய் தொழிலினி னமர்ந்தாள். (சு)

அறவு மெய்யிளைத் திட்டதையினையள்கா தலனும்
பறவை நாயக னென்னென வினவினன் பணிசெய்
குறையி லென்றதன் வகையெலாங் கூறினள் குறுகிச்
சிறிய தாயினைக் கருடனென் பவனிது தெரிக்கும். (எ)

முன்னு தித்தவ ளேவல்செய் திடுவது முறையன்
றென்ன வோதின னவளிது பணிகளுக் கிசைத்தாள்
பன்ன கங்கள்வா னமிர்தெமக் குதவிடிற் பரிவி
னன்னை யேவல்செய் வினையினை விடுகென வறைந்த. (அ)

ஒல்லு மவ்வுரை கருடனுக் கன்னவ ளுரைக்க
நல்ல தென்றவ னிசைந்துவந் தகத்தினு ளோடிச்
செல்வ மோங்கிய விடைமரு தெனும்பதி சேர்ந்து
சொல்லி டத்தனிச் சிறப்புறு வர்வியிற் றோய்ந்து. (௯)

பணைமு லைக்கொடிப் பாகனை வலங்கொடு பணிந்து
தணிவி லன்பொடு துதித்துவா னுலகினைச் சார்ந்து
துணிவொ டியாவரு மணுகுறு வகையெதிர் சுழலுந்
திணிய சக்கரத் தசப்படா தணுவெனச் சென்று. (௧௦)

உண்ணு ழைந்துமெல் லெனவவ ணுறைந்திடு மமிர்த
வண்ண வொண்மணிக் குடந்தனைக் கைக்கொடு வருங்கால்
விண்ணு ளாரறிந் தெதிருற வெஞ்சமர் விளைக்க
வெண்ணு மன்னவர் தம்மைவென் கண்டன னேக. (௧௧)

துன்னி மற்றவர் சூழ்ந்துபின் றுதித்திட முன்னர்ப்
பன்ன கங்களுக் கிசைத்தசொற் பழுதுறு துதவி
யன்னை யேவலை மாற்றுவ னுங்குநீ ரடைவுற்
றின்ன தைக்கொடு சென்மினென் றிசைத்தவ னெய்தி.

ஓத ராவினங் கட்குமக் கமுதுகொண் டுற்றேன்
சீத நீர்படீஇத் தொடுகெனத் தெரித்தொரு தருப்பை
மீது வைத்தனை யேவலை மீட்டனன் சென்று
றோத ரத்தவை மூழ்குமுன் சுரர்கள்கொண் டகன்றார். (௧௩)

வந்து பார்த்தன திகைத்தன மணிக்குட மிருந்த
நந்த லில்லதோர் தருப்பையை நக்கின விருப்பான்
முந்து நாவிரு பிளவுறப் பிளந்தன முழுதுஞ்
சிந்தை நொந்தன சென்றன சீறுமப் பணிகள். (௧௪)

பொருந்து மித்திறமுநி விர்காள் பூருவ முமக்குந்
தெரிந்த தேயமிர் தெடுத்தவன் வந்திடு திறனும்
வருந்து தாயினை மீட்டதூஉ மருவுறு மனைய
பரந்த வாவியிற் படிந்திடு பயனென லாகும். (௧௫)

இசைக்குந் தென்றிசைக் கோணுறு தீர்த்தத்தி னீச
திசைக் கணுலிரு வசுக்களின் றீர்த்தமொன் றினிது

வசிக்கு மற்றதின் வளர்பிறை யட்டமி மருவி
யசைக்கு மன்பொடு படிந்தலர் வேண்டிய தடைவார். (௧௬)

விரவுறும் வசுதீர்த்தத்தின் விளம்பு முத்த ரத்தி
னிரவி தீர்த்த மொன்றிலங்கிடு மிதனின் மற்றனையோன்
பரவு வார நாளவனெழு காலையிற் படியின்
மருவு தீப்பிணி யாவையு மாய்ந்திடு மன்றே. (௧௭)

மன்னு மாதவன் றடத்தயன் மருத்து கடீர்த்த
மன்ன தோங்கிடு வாதநோ யகற்றிடு மதனின்
முன்ன ரம்மருத் துக்கள்போய் மூழ்கிநீள் கருவிற்
பொன்னி லந்திறை குறையுடல் பூரண முற்றார். (௧௮)

வட்ட வாருண வாவியின் றென்புடை வயங்குஞ்
சிட்டர் போற்றிடு நரசிங்க தீர்த்தமொன் றதனைத்
தொட்டு வந்துடன் குட்டநோய் தொலைத்தன ரநேகர்
கட்டு னைப்பதென் மூழ்கினோர் கலந்த பேரின்பம். (௧௯)

அந்த வாருண வாவியின் குணதிசை யமர்ந்து
நந்தி தீர்த்தம் வந்தாடினோர்க் களித்திடு ஞானஞ்
சந்த நீடதின் குடக்கினிற் றுரோணன் செய்தடாகம்
முந்த வன்றனக் கீந்தது மொழிந்திடு மதலை. (௨௦)

இராவ ணன்றன் மீதேகு நாளிராகவக் குரிசில்
விராவு மன்புட னுமையவள் மேவுசந் நிதிக்கட்
டரா தலம் பணிந்தேத்திடச் சமைத்ததோர் கூபம்
பராவு தன்வயிற் படிந்தவர் பகைமை தீர்த்திலங்கும். (௨௧)

வருண தீர்த்த வுத்தரந்தனில் வாளிமூ வாறில்
வரமுறுஞ் சுரதீர்த்த மொன் றிலங்கிடு மருதப்
பரமன் றென்புடை யுலகெலாம் பகர்முனி தீர்த்தம்
விரவு மொன்றிவை யிரண்டுமேல் விமலன் குளுதவும். (௨௨)

கூறிடும் முரகாரி தீர்த்தாதி யாக் குலவு
மாறு நாளும்வெம் பவத்தொடு துயரமு மகற்றும்
மாறில் செல்வமீண் டுதவிடு மன்னியா டினார்கட்
கீறில் சீருறுகச் சபதீர்த்த மேலிசைப் பாம். (௨௩)

கருடதீர்த்தாதிச்சருக்க முற்றும்.

---

சிவமயம்.

# கச்சபதீர்த்தச் சருக்கம்.

விலையிலா மணிக்குல முறுசைய மால் வெற்பின்
மலைய மாதவன் கமண்டல வயிற்றினின் றெழிற்கு
வலைய மேற்குண திசைக்கொடு மகரநீ டலவு
மலையி னுற்ற பொன்னியிற் சிலதீர்த்த முண்டாங்கு. (க)

சந்த முற்றிடக் காவிரி வாரணந் தாங்கிச்
சுந்தரந் திகழ ரம்பைகள் சூழ்வுறப் புலவோர்
வந்திறைஞ்ச வச்சிர மெடுத்தே கலின் வானாட்
டிந்திரன் றனக்கிணை யெனப்புவி யிடையி லங்கும். (உ)

பெருமை மேவித்தென் கீழ்த்திசை யடைந்து மேற்பிறங்கல்
விரவு சோதி கண்ணுற்றொரு பூதமாய் வெந்தீப்
பொருவுந் தன்னிடத் தடைந்துளோர் கொடுவினை போக்கி
யுரமுறும் பகரேந்தி கலியமனை யுறழும். (ங)

பொருவில் காருருக்கொடு நிசியலை யுறப் போந்து
நிருதியாகி மீனிவர்ந்து வாருண முறநிலவி
மருவுபாசி யென்றிடல் கொடு வருணனாய் மண்மே
லருண மூர்ந்துயிர்க் குயிராதாய னிலமா யோங்கும். (ச)

ஈசன்றன் பதிமருங்கி னுற்றுயர் தன மெய்திப்
பேசலுற்றிடு மளகையோன் புரைதரும் பெரிது
வாச நீடறு கணிந்து காமதகன நிரப்பித்
தேசின் மிக்கவீ சானனிற் சிறந்திடு மன்றே. (ரு)

துன்னினோர் தமக்க சோகத்தோ டஞ்சுகந் தோன்ற
மன்னிவேங்கை நீடிபங்கொடு குறிஞ்சியாய் வழிக்கோள்
பன்னிடும் பொருள் பறித்து மேல்விடலையும் பறித்துக்
கன்னியுந் தரித்தோதிடு பாலையைக் கடுக்கும். (சா)

மால டைந்துசிற் றிடைச்சியர் பயின்றுமான் மருவிக்
கோல முற்றிடு கலுழியும் பூவையுங் கூடி
யேலு முல்லைதா மனைவயல் வஞ்சிநீ டிலஞ்சி
பாலி சைந்தருச் சுனமுறு மருதமாப் படரும். (எ)

கடல் ணைந்துழுத் தரும்பிடு கடிமலர்ப் புன்னை
மடல் விரித்தெழு கேதகை பட்டின மருவித்
தடமி சைந்திடு நெய்தலாய்த் தயங்கிடு மினைய
புடவி மீதுளோர்க் கமுதமாய் விளங்குமப் பொன்னி. (௮)

கலை யறிந்தன மேற்கொடு கலைமக ளாகி
மல ரணைந்துவண் டிகிரிசங் கேந்திமே லவன்முற்
றில கெழிற்றிரு வாகிவெற் பிடத்தினிற் றேன்றி
யல கினீடறம் விளக்கலி னம்பிகை நிகர்க்கும். (௯)

புனையு மண்மன வியாலையும் புகல்பர னுருவாய்த்
தனையொத் தோங்கிடு காவிரி நதிற்றவழ் காற்றுங்
கனையர் மேற்படிந் திடினும்பட் டேகிடுங் காலை
யனையர் வெம்பவ மனைத்து மேற்றகன் றிடு மன்றே. (௰)

போற்று காவிரி பொருந்துகால் பொருந்திவெம் பவங்கள்
மாற்று மேலதை நோக்கினோர் மலர்க்கைதின் டினர்க
டோற்ற திற்படிந் துளோர்பவந் தொலைவுறு மென்னச்
சாற்ற வேண்டுமே யெவர் தரிசனத்தினுஞ் செலுமால். (௧௧)

பன்னு கங்கையின் மூன்றுநாட் படிந்திட யமுனை
தன்னி லைந்துநாட் டோய்ந்திடத் தலைந்திடும் பாவ
முன்னு காவிரி யொருதின மூழ்கிடி லகற்றும்
பின்னு மவ்வுட லளவுசெய் பிறங்குவெம் பவமும். (௧௨)

வன்ப கைப்பிணி தவிர்த்திடு மருவுமெய்ஞ் ஞான
மின்ப மெய்திடுந் திலத்துட னப்புன லேற்றுத்
தென்பு லத்தவர்க் குதவிடிற் றிகழவர் மரபிற்
றுன்ப மார்நிரை யத்துளோ ரடைகுவர் சுவர்க்கம். (௧௩)

இயல்கொள் சையமா தியவிட மெவற்றினு மிசைத்த
பயனு றத்தரு மவற்றினிற் பகருமா னைக்கா
மய லகற்றுமை யாறுதென் குடந்தையொள் மருதூர்
வியலு றும்புகழ் மயிலையா தியதலம் விசேடம். (௧௪)

கூறி டுந்துலா மதியினிற் கூடிநீ டறுபத்
தாறு கோடிதீர்த் தங்களும் பொன்னியி னமரும்
மாறி லம்மதி யன்னதின் மருவியா டினர்க
டேற வற்றெலாஞ் சென்று தோய்பயனதூஉஞ் சேர்வர். (௧௫)

கந்த மார்தொடைக் கவெரன்றன் கன்னிகை யாகிச்
சிந்து மன்னவன் றனக்கொரு துணைவியாய்த் தெரிக்கு
மிந்த வையகத் துயிர்களுக் கன்னையா யிலங்கு
மந்த மாநதி மான்மிய மநேகமுண் டின்னும். (கசு)

மேவு மந்நதி தனில்வட புறந்தனில் விளங்குந்
தாவில் கச்சப தீர்த்தமாந் தனித்துறை யதற்கு
மாவி லங்கிடு தருமுநி மருவுகச் சபனே
காவ லன்புகழ் வீரபத் திரனெனுங் கடவுள். (கஎ)

வாம தேவனங் கதற்கிசை தேவதை வயங்கக்
காமர் வண்டுறை மூழ்கியெட் கலந்தபோ னசநற்
ருமமுற்றிடு சிவிகை தானியந்தரு தகையோர்
பூமி காவல்செய் திடுவர்மேற் கொடுவினை போக்கி. (கஅ)

அவமில் சீருறு கச்சப னத்துறை மருங்குத்
தவமி யற்றினன் சிலபகல் பிறைமதிச் சடையோ
னுவமை யில்லதோர் வாமதே வத்தனி யுருவோ
டவ ணுதித்தன னெதிரிடத் தலகிலா தவரின். (கக)

ஆன்ற மாதவன் பணிந்தெழுந் தேத்திட னமல
னேன்ற நீபெறு வரங்களென் னென்றன னனையோன்
வான் றயங்குனை யநுதினம் வணங்கா னிறைவ
தோன்று மிவ்விடங் கொண்டுறைந் தருள்கெனச் சொன்னான்.

தாது லாமலர்க் கூந்தன்மால் வரைக்கொடி தன்னோ
டாதி நாயக னத்திற னுண்டினி துறைந்தான்
மாத வத்தனு மனமகிழ்ந் துறைந்தனன் வைகு
மேது கொண்டவன் பெரியனு லத்துறை யிலங்கும். (உ௦)

பேசு மத்துறை படிந்தவன் பெரிதுகந் துறையு
மீச னைப்பணிந் தளவில ரின்பநீ டுற்றார்
மாசின் மாதவக் கவுதம முனிவரன் மகிழ்ந்து
வாச முற்றிடு தடந்துறை வளமினிப் புகல்வாம். (உக)

கச்சபதீர்த்தசருக்க முற்றும்.



உ

சிவமயம்.

# கௌதமதீர்த்தச் சருக்கம்.

தோற்று கச்சப தீர்த்தத் துறைக்குமேற்
காற்றல் சாலு மடுகளை யொன்றினிற்
றேற்றுங் கோதம தீர்த்தத்து றையொன்று
போற்று மாங்கதைப் போற்றுசண் டேசனே. (௧)

கட்டு ரைத்த கவுதம னாகிய
சிட்ட னாங்குறுஞ் சென்றதி னாடியே
விட்டி டிற்புவி கோதனம் வேதியர்க்
கிட்ட மாமனத் தெண்ணிய வெய்துவார். (௨)

வடங்கொள் கொங்கை யகலிகை மற்றதிற்
படிந்த புண்ணியத் தாலோர் பவத்திறுற்
றிடங்கொள் சாபச் சிலையுருப் போக்கியுற்
றடைந்த னள்கண வன்றனை யாகினாள். (௩)

இன்று மெண்ணில வேந்துமப் பூந்துறை
தன்னின் மூழ்கித் தரணி புகழ்ந்திட
மன்ன ராகி மகிழ்வோ டிருந்துபின்
பொன்னி லத்திற் புலவர்க ளாயினர். (௪)



ஆற்றல் சாலு மருந்தவக் கோதமன்
போற்றி டுந்துறை மாண்பு புகன்றனஞ்
சாற்றி டொண்புகழ் சாருல கெங்கணுந்
தோற்று பூசத் துறை வளங் கூறுவாம். (௫)

கௌதமதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கல்யாணதீர்த்தச் சருக்கம்.

காவிரித்தென் புறமதனிற் கல்யாண தீர்த்தமதைக் காப்போ னந்தி
தேவதைநம் மருதீசன் முனிவனுரோ மசனாசு தெரிக்கு மூல [யென்ப
மேவிரண்டோ டொன்றுறுசேய்த் தத்துறையின் குணக்குமேற் கெல்லை
மேவதனிற் படிவற்கு நினைந்தெழுமுன் சிலவினைகள் விட்டுநீங்கும். (௧)

பரவுமந்தத் துறையிலறிந் தேனுமறி யாதேனும் படியினோர்காற்
பிரமகத்தி முதலான கொடுவினைக ளுடனகலும் பிணியினீங்குங்
கரமதனாற் பசுவொடுபொன் முதலியவே தியர்க்களித்தோர் கயிலைசேர்வர்
திரமுறுமஞ் செழுத்தினையங்கிருந்துவிதிப்படியுரைப்போர் சிவனேயாவர்

கின்னரர்கள் கிம்புருட ரியக்கரிராக் கதரசுரர் கிளைகொள்வானோர்
பன்னகர்பா ரிடத்தலைவர் கந்தருவர் தவமுனிவர் பயிலுஞ்சித்தர்
பின்னுமுறு மனிதரொடு பிறர்களுமத் துறைப்படிந்து பெரிதுமாங்கே
நன்னியம முடித்திறையோன் பதம்பணிந்து மகிழ்வுறுவர் நாளுமன்றே.

வளந்தருமத் துறைபடிதற் கநுதினமும் விசேடமதா மதியின்வார
மளந்திடுமன் னவற்றதிக மதற்கதிக மதிமுதனா ளதற்குமேலாய்த்
தெளிந்ததுநீ டமாவாசை யதற்கதிக மெனலாகுஞ் சீறுநீக்கொள்
விளங்குமிரு சுடர்தொடுநா ளவற்றினுக்குந் தைப்பூசம் விசேடமாகும்.

பூசமதிற் படிந்திடுதல் விசேடமதா லத்துறைக்குப் புகலுநாமந்
தேசமுழு வதும்பூசத் துறையென்ன வெவ்வுயிருஞ் சென்றுமூழ்கி
மாசுறுதீ வினையகற்றிப் பரனருளாற் பேரின்ப மருவலாலே
பேசலுறுங் கல்யாண தீர்த்தமென வொருநாமம் பெரிதுமன்றே. (௫)

இடமுறுகார்க் கோடனெழிற் பரிச்சித்துத் தனைக்கடித்த தீமையந்தந் [தி
தடமுறுதீர்த் தந்தனிற்றோய்ந் தகன்றதுவெங் கலியலைக்கத்தளர்ச்சியெய்
யிடமுறுமே தினியிடத்தி னலைந்திடுநா ளத்துறையுற் றினிதுமூழ்கி
நிடதநெடு நாடுமனை மகவடைந்தா னளனென்னு நிருபனம்மா. (௬)

வந்துபெருஞ் சேனையுட னெதிர்நின்று நான்வணங்கா வயிரமேற்கொண்
டிந்தநெடு நைமிசத்திற் றருப்பையினா லெளியேனை யெறிதலுற்று
முந்துயிர்கொண் டிடுபாவம் புகல்பூசத் துறையினிடை மூழ்கியன்றே
யந்தமில்சீ ருற்றபல பத்திரன்வீ டுற்றின்ப மடைந்தானீடு. (௭)

தண்ணிதழி வேணியனுக் கன்புடையீர் பகிரதனுந் தவத்தின்மிக்கோன்
விண்ணிலுறு கங்கையினைப் பூதலத்தின் வரவழைத்து மேலைநாளி
லண்ணலுறு தனதுகுலத் தறுபதினா யிரவர்கதி யடையுமாறு
பண்ணியதத் துறையினிடைத் தைப்பூசந் தனிற்படிந்த பயனோவேறே.

சிவநிசியி லொருகொடியோ னத்துறையிற் படிந்தெழுந்து சென்றுகோயி
லவணுறுசில் பொருளிரவிற் கவர்ந்துபுறத் தணைந்திடுங்கா லவனைத்தூதர்
கவனமுறக் கொண்டியமன் முன்விடலு மவனிறையோன் கங்குறன்னிற்
புவிபுகழ்பூசத்துறையிற்படிந்திட்டாய்கயிலையிடைப் போவென்றுய்த்தான்.

வேறு.

முன்ன ரொத்துணை யோர்களுந் துறையிடை மூழ்கி
யின்ன றீர்ந்தின்ப முற்றன ரிந்துகை யோரு
மன்ன னிற்படிந் தெய்திய தறைதலுற் றனமீண்
டின்னு முண்டுபல் கரையதற் கேய்ந்துழி யறைதும். (௧௰)

கல்யாணதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# சேடதீர்த்தச் சருக்கம்.

ஆடரூக மணிபவற் கன்பினீர்
நாடு பூசத் துறையி னலந்தரு
பீடு சால்கதை பேசி னுமினிச்
சேட தீர்த்தச் சிறப்புப பகருவாம். (௧)

ஆதி காலத் தரவின் குலத் திறை
பூத லத்தைப் பொறுக்க வலியிலா
னேத முற்றுட லொல்கி யிளைச்செயல்
யாதெ னப்பிறை சூடியை யெண்ணி னான். (௨)

இன்ன செய்த னெனத்தெளி வெய்தினான்
மன்னு மிப்படி மீது மருவினான்
பொன்னி யங்கிடு பொன்னியி னந்தலத்
தன்ன தண்டுறை யாடின னாடினான். (௩)

மகித லத்தைப் பரிக்கும் வலியலா
தகில லோகமு மாற்றிடு மாற்றல்பெற்
றிகல்வின் மேரு விடைமரு நிசனை
மகிழ்வு றப்பணிந் தானெதிர் வாழ்த்தினான். (௪)

நற்றி றச்சிவ ஞானத் திருவொடு
மற்று நீடு வரங்களு மின்புறப்
பெற்ற னன்விடை கொண்டு பெயர்ந்தன
னுற்ற னன்ற விலகு முலகிடை. (௫)

மன்னு சேடன் மருவிமுன் னாடிய
தன்மை யாலத் தடந்திகழ் பூந்துறை
யன்ன வன்றிரு நாம மணிந்தது
துன்னு மெய்வயி னோருந் துதித்திட (௬)

சேடதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கந்ததீர்த்தச் சருக்கம்.

அந்த மில்லவன் பெயரினோ டமர்ந்துதன் னிடத்து
வந்து மூழ்கினோர் பவந்துலைத் தெதிர்வலி வழங்குஞ்
சந்த முற்றிடு தீர்த்தத்தின் றனிச்சிறப் புரைத்தாங்
கந்த தீர்த்தமான் மியமினிக் கட்டுரைந்திடுவாம். (௧)

கூறி டத்தகைச் சேடதீர்த் தத்துறைக் குணபாற்
றேறு சீர்பெறு கந்தமா தீர்த்தமொன் றுளது
மாறில் செல்வமும் விசயமுங் கீர்த்தியும் வழங்கு
மாறு மூன்றெனுந் திதியிரு ளினிலணைந் தாடின். (௨)

ஆர மேருவைப் பறித்தெடுத் தம்மனை யாடும்
பாரி டங்களீ ராயிர வெள்ளமும் பரவுங்
கூரி லங்குவச் சிரத்தனுங் குலவுபல் வீரரும்
வீர வாகுவே முதனவ வீரருஞ் சூழ. (௩)

வண்ண வேற்படை முருகவேள் கயிலைமால் வரைநின்
றெண்ண ரும்புகழ்ச் சேய்ஞஞலூ ரெய்திமுச் சுடர்க்க
ணண்ணல் பாசுப தாத்திர மளித்திடக் கொள்ளா
வுண்ம கிழ்ச்சிமிக் கிடைமரு தெனும்பதி யுற்று. (௪)

மன்னு றுஞ்சர மருங்குறித் திலங்குமீன் வளர்த்துக்
கொன்ன வின்றிடு மயில்கொடு தானெனக் குலவும்
பொன்னி மாநதித் தென்புடை புகுந்தெழி லுறையு
முன்னி சைத்திடு துறையிடை மூழ்கினு லினிது. (௫)

மருத வாணனைப் பணிந்தெதிர் வருஞ்சில வேற்றுக்
கருது தென்றிசை மயேந்திரங் கலந்துசூ ரனைநேர்
பொருது வென்றவன் படைஞர்கள் போற்றிடு மிமையோ
ரிருதி றத்தரும் விசும்பினிற் குடிபுக விழைத்தான். (௬)

அந்த வான்மயி லூர்தியன் றாடிய திறந்தாற்
கந்த தீர்த்தமென் றிசைப்பர்கள் கருதுமத் துறையைச்
சந்த [illegible] யி ராவதன் சாற்றுமத் தலத்தில்
வந்து சோதியைப் பூசித்த வாறினி வகுப்பாம். (௭)

கந்ததீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்.

# ஐராவததீர்த்தச் சருக்கம்.

——:(*):——

செஞ்சலசப் பொகுட்டிலிருந் தருண்மடந்தை புகழ்வாக்கின் செல்
விக்கங்கோர், விஞ்சு கதிர் மணியெழிற்பொன் னரிமாலை யுகந்தளித்தாள
விளங்குமன்று, ளஞ்சலில்சீர்ந் துருவாசற் கிந்தனளன் னவனிமையோ
ரிறைவற்கீய, நெஞ்சினிடைக் குறிந்துறுபொன் னுலகடைந்தா னவன்
சென்ற நேரந்தன்னுன். (௧)

கனிமொழிச்செந் துவரிதழ்ப்பொற் கலசமுலை மேனகையெனுங் கவரிவீச
நனிமலர்ப்பூங்குழற்கயற்கட் டிலோத்தமைமென்சதிமுறையி னடிப்பமீது
தனிமதித்தண் குடைநிழற்றக் கடங்கவிழ்வெள் ளானைமிசைத் தகைமந்தா
ரப், பனிமதுத்தண் மலர்சொரிந்து வானவர்போற் றிடமறுகிற் பவனி
போந்தான். (௨)

ஆங்கவனைக் கண்டுமுனி வரன்சிலவா சிகள்கூறி யருளையிந்தான்
றீங்குவரு காலமதி கெடுமன்றே யன்னவனோர் செங்கைநீட்டி
வாங்கிமத யானையின்மேல் வைத்தனன்மற் றதுவுமிலங்கின்மரபதன்றே
தாங்கிலதாய் மறுகினிடை வீழ்த்திடவெதிர் தேய்த்ததுதன் முனிறனே. (௩)

கண்டதனைத் துருவாச முனிவரனிந் திரற்சீறிக் கரியாஞ்ச
முண்டுலகங் காத்தபர னடியவர்கள் விருப்பமுறு தொகுக்குஞ் செல்வங்
கொண்டுமதங் கொண்டொருகை கொண்டெதிர்கான் கொடுத்ததனைக்
கொண்டுபீடு, மண்டுகளி யானைமிசை வைத்தனையாங் கதுசிந்த மதித்தி
டாது. (௪)

நீயிவணித் துணையிறுமாப் பெய்தியது செல்வாதி னிலையினன்றே
வாயதுதெண் டிரைக்கடலிற் சிந்திடுக யானையுங்காட் டானையாகிப்
பாயபுவி மீதுழல்க வெனச்சபித்தான் சபித்திடுமுன் பரவைமீது
மேயபெருந் தனிச்செல்வஞ் சிந்தியதி சனைக்கண்டோர்வினைகளென்ன.

துறந்திடக்கண் டெழிற்செல்வ மிந்திரன்மா துயரினொடு துணுங்கிநின்று
னிறந்தமைந்த சால்புடையா ராயினுமென் னும்வெகுளி னிசைக்கு மே
லோர், சிறந்திடுசெல் வமுமமிர்து மனையகடல் கடைந்துகொண்டார் தே
வர்பின்றுன், மறந்ததும்பு வெண்களிறுங் கிரியுருவா யுலவியது வைய
மீது. (௬)

வேறு.

தன்னுயிர் தனையும் புரந்துதற் சார்ந்தோர் தம்மையும் புரந்திடுங் கொற்ற
மன்னனைச் சேர்ந்து வாழ்வதே பெருமை வறுமையாற் பிறரினுற்றுபருந்
துன்னிடு விதிர்ப்புந் தான்மிகமருவித் தொடர்புறத் தனையடைந்தவரு
மின்னல்கூர்ந் திடக்கண் டிருக்குமே மழையைச்சேர்ந் திருந்திடலேழமை
த்தன்றே. (௭)

வேறு

பூவலயத் தலைக்கிடுநா ளொருபகலோங் கிடைமருது பொருந்திக்கோடு
மேவிமணி யுருக்கொண்டு துதிக்கைகொடு தனைப்போல விளங்குநீடு
காவிரிக்க ணுறுகந்த தீர்த்தமதின் றென்றிசையிற் கதழ்வினேகு
மேவிரண்டின் வளர்விக்கி னேசுரதீர்த்தந்தனைச்சென் றெய்திற்றம்ம. (௮)

சென்றுபுனல் படிந்திடலு மணிமாசு கழுவுற்ற திறமேயென்னத்
தொன்றிலகு தனதுருவந் தோன்றிடக்கண் டுவகைமனந் துளும்பவுற்றுக்
கொன்றையறு கணிதருசெஞ் சடையவனை மருதடியிற் குடியுற்றோனைத்
தன்றிருக்கண் களிகூரக் கண்டுபணிந் தேத்தியது தகைமைதோன்ற. (௯)

வேறு.

கருவினிடைப் புகாதபடி யெளியேன்மீது
காத்தியென நின்றிரந்து கருத்துங்கண்ணு
மொருவகைமீண் டிடக்கொண்டு குணபாற்சென்றாங்
கொருபதியை யுறைபதியாக் கருதிவைகித்
திருமருவு திறத்தன்முத லெவர்கள்வாழ்வுஞ்
செஞ்சடைவா னவனடியைப் பூசைசெய்து
பொருவிலவன் றரப்பெற்ற தென்னத்தேறிப்
பூசிப்பான் றாணுமுறப் பொருந்திபேகி. (௧௦)

வைகலுறு முப்பொழுதுந் தனக்குத்தூய
வடிவருள்கா விரித்துறையின் மருவிமூழ்கிக்
கைகலந்த புனலினொடு நறுமென்போதுங்
கருத்தில்வள ரன்பினொடு களிப்புங்கொண்டு
மைகலந்த தனிமிடற்று மருதவாணன்
மலரடியைப் பூசித்து வணங்கிப்போற்றப்
பைகலந்த வரவினொடு மதியஞ்சூடு
பரன்சிலநா ளணைந்திடுமு னெதிரேதோன்றி. (௧௧)

ஈண்டுறுமெய் யன்பினொடு நமைநீபூசை
யியற்றியதான் மிகமகிழ்ந்தோ முனக்குநம்பால்
வேண்டுவதென் னிசைத்தியெனப் பணிவுற்றம்மா
வெய்யதுரு வாசமுனி கொடுத்தசாப

மாண்டதெழிற் பொன்னியிடைப் படியுமுன்னர்
மன்னிடுசின் னருளதனு லினியெந்நாளுங்
காண்டலுட னின்மலர்த்தாள் பூசித்திண்டே
கலந்திருக்க வருள்கவென வுரைத்தேத்தி. (கஉ)

இன்னணமக் களிறுரைப்ப மருதவாண
னித்தலத்தி னமையொருகா லருச்சித்தோர்கள்
மன்னுதனிச் சிவலோக மெய்துவார்கள்
வச்சிரத்தோ னமதிடத்தி லன்பனாகு
மன்னவன்பாற் சென்றிருநீ சின்னாள்பின்ன
ரணிமருவு சிவபுரியி னடையலாகு
மென்னவுரைத் தானதுமா றரைப்பவஞ்சி
யிமையோர்கள் போற்றவின்று டேற்றதன்றே. (கங)

நினைவரிய புகழ்விக்கி நேசாதீர்த் தந்துறைமுன் னிலவுராற்கோட்
டனையகளி றுடுதிறத் தாலயிரா வதத்துறையென் றறையுநாமம்
புனைதரலுற் றிட்டதஃ துறைபதியு மதன்பெயராற் பொலிந்ததம்ம
வினியினிய நெடுஞ்சோத்தி வீரசே னன்கதையின் மேலுரைத்துச்சொல்வாம்.

ஐராவததீர்த்தச் சருக்க





உ

சிவமயம்

# சருக்கவகராதி.





சருக்கவகராதி முற்றும்.